# செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி

முனைவர் பி. தெட்சிணாமூர்த்தி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி

முனைவர் பி. தெட்சிணாமூர்த்தி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | Centamiḻc Celviyiṉ Ilakkiyap Paṇi |
| Author | : | Dr. P. Dhatchinamoorthi<br>5, V.O.C. Street,<br>Tirunelveli - 627 006. |
| Publisher | : | International Institute of Tamil Studies,<br>C.I.T. Campus, Tharamani,<br>Chennai - 600 113. |
| Publication No. | : | 322 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1999 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 70GSM Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 Points |
| No. of pages | : | VI+90 |
| Price | : | Rs. 20/- (Rupees Twenty only) |
| No. of Copies | : | 1.200 |
| Printed by | : | **PAVAI PRINTERS (P) LTD.,**<br>142, J.J.K. Road, Royapettah,<br>Chennai - 14. PH: 8532441 |
| Subject | : | Journalism |

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அணிந்துரை

நாணலானது காற்று அடிக்கின்ற திசையை நோக்கி வளையும். ஆயின் ஆலமரம் காற்றடித்தாலும், கடும் புயலடித்தாலும் நிமிர்ந்து நிற்கும். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தோற்றுவித்த தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் கிளைகள் விட்டு, பரந்து விரிந்த விழுதுகள் உள்ள ஆலமரத்திற்கு ஒப்பானவர்; வாழ்க்கையைப் பயனுள்ளதாக அமைத்துக்கொண்டவர். அரளிச் செடியில் பூத்த பூக்கள் காண்போரின் கண்ணைக் கவரும் வகையில் மலர்ந்திருக்கும். ஆயின் அரளிச் செடியின் பூக்களால் ஒன்றும் பயனில்லை. ஆனால் துளசிச் செடி கவர்ச்சிகரமாகத் தோன்றாவிட்டாலும் அதன் பூ, கிளை, இலை, தண்டு, வேர் முதலியன நோய் நீக்கும் தன்மையுடையன.

தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் கவர்ச்சியான அரளிச் செடி போன்று வாழாமல் பலருக்கும் பயன்படும் துளசிச் செடியைப் போல வாழ்ந்தவர். தமிழுக்குத் தொண்டு செய்பவன் சாவதில்லை என்பது பாரதிதாசன் கூற்று. பெரியவர் சுப்பையா பிள்ளை அவர்களுக்கும் பாரதிதாசன் கூற்றுப் பொருந்தும். அவருடைய நற்பணிகள் இருவகைப்படும். ஒன்று சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை உருவாக்கியது. மற்றொன்று செந்தமிழ்ச் செல்வி இதழை வெளியிட்டது. திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் தமிழ்ப் பணிகள் என்றும் நிலைத்து நிற்கத்தக்கன. அவர் பழந்தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்கள் ஆகியவற்றைப் பதிப்பித்து மக்களிடம் பரப்பினார். அழிந்து விட்டதாகக் கருதப்பட்ட தமிழ் நூல்களை மீட்டெடுத்துத் தந்தார். தமிழின் பெருமையைக் கூறும் ஆங்கில நூல்களை மறுபதிப்புச் செய்தார். இந்நிலையில் ஒரு பெரிய பல்கலைக் கழகம் கூடச் செய்ய இயலாத பெரும்பணிகளைச் செய்தவர் தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை ஆவார்.

செந்தமிழ்ச் செல்வி எனும் திங்கள் இதழை 1923 சனவரித் திங்களில் தொடங்கினார். செந்தமிழ்ச் செல்வி இதழின் ஆசிரியராக முதலில் தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களும், பின்னர் அவர் மருகர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களும் ஆசிரியர்களாகச் செயல்பட்டனர். செந்தமிழ்ச் செல்வி இதழில் அரிய ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டனர். சங்க இலக்கியம், காப்பியம், பக்தி இலக்கியம், திருக்குறள், சிற்றிலக்கியங்கள், இலக்கணங்கள் பற்றிய கட்டுரைகள் இன்றும் இடம் பெற்று வருகின்றன. அத்துடன் தமிழ் மீதும், தமிழ் இனத்தின் மீதும் தமிழ்ப்பகைவர்கள் ஆதிக்கம் செய்தபோது செந்தமிழ்ச் செல்வி இதழில் கண்டனக் கணைகளைத் தொடுத்தார். செந்தமிழ்ச் செல்வி இலக்கிய இதழாக மட்டுமில்லாமல் தமிழ்ப் பகைவர்களைத் தாக்கும் ஏவுகணையாகவும் அமைந்தது.

செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணிகள் எனும் இந்நூல் பி. தெட்சிணாமூர்த்தி அவர்கள் நிகழ்த்திய அறக்கட்டளைச் சொற்பொழிவாகும். செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணிகள் குறித்து நுணுகி ஆராய்ந்த இந்த நூலாசிரியர் பாராட்டிற்குரியவர். நிறுவனத்தில் கழகம் வ. சுப்பையா பிள்ளை அறக்கட்டளை நிறுவியவர்களுக்கு எங்கள் நன்றி. இவ்வறக்கட்டளைக்குப் பொறுப்பாக அமைந்த முனைவர் ச.சிவகாமி அவர்களுக்கு நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி-பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் நூலாக்கம் செய்து தந்த விக்னேஷ் அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி.

# முன்னுரை

சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 21.12.1992, 22.12.1992 ஆகிய நாட்களில் தென்னிந்தியச் சைவ சித்தாந்தக் கழக நூற் பதிப்புக் கழகத்தை நிறுவிய தாமரைத் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 'செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி' எனுந்தலைப்பில் யான் சொற்பொழிவாற்றினேன். அச்சொற்பொழிவில் வரிவடிவமே இந்நூல்.

அறக்கட்டளைச் சொற்பொழிவை இத்தலைப்பில் நிகழ்த்த உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் பொறுப்பில் அன்று இருந்த முனைவர் அன்னிதாமசு அவர்கள் வேண்டியதன் விளைவே இந்நூல். இதழ் பற்றிய பொழிவு என்பதால் 1923 முதல் திங்கள் ஏடாக வெளிவந்து கொண்டிருக்கும் அத்தனை இதழ்களும் கிடைக்க வேண்டுமே என்ற ஏக்கத்தோடு என் வீட்டருகே, உள்ள சிவஞான முனிவர் நூலகம் சென்றேன். கழக நிர்வாகத்தில் இயங்கி வரும் அந்நூலகத்தில் அனைத்து இதழ்களும் தொகுதிகளாய் கட்டுமானம் செய்யப் பட்டிருந்ததைக் கண்டு மகிழ்ந்தேன். கழகம் வ. சுப்பையா பிள்ளை அவர்களும், அவர்கள் மறைவுக்குப் பின் அவர் தம் மருகர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களும் இப்பணியைச் செம்மையாகச் செய்திருப்பதால் எம்.பில். முனைவர் பட்ட ஆய்வாளருக்குப் பெரிதும் துணை புரியும் வகையில் இத்தொகுதி நூல்கள் உள்ளன. ஆய்வாளருக்குத் துணை நூற்களாக விளங்கும் செந்தமிழ்ச் செல்வியின் தொகுதிகளே என் பொழிவுக்கு மூல நூல்களாக அமைந்தன.

இந்நூல் இருநாள் சொற்பொழிவு என்பதால் இருபகுதிகளைக் கொண்டுள்ளது. முதற்பகுதி இதழியல் நோக்கில் அமைந்தது. இரண்டாம் பகுதி இலக்கியப் பணி பற்றியது. இதழின் நோக்கம், அமைப்பு வரலாறு பற்றிய விளக்கங்கள் முதற் பகுதியில் அமைந்துள்ளன. இரண்டாம் பகுதி இலக்கியப் பணியின் விளக்கமாதலின் சங்க இலக்கியம், திருக்குறள், காப்பியம், சிற்றிலக்கியம், இக்கால இலக்கியம் எனப் பகுக்கப்பட்டு, செந்தமிழ்ச் செல்வி இதழின் வெளிவந்துள்ள கட்டுரைகள் அடிப்படையில் சொற்பொழிவு நிகழ்த்தப் பெற்று, நூல் வடிவமாக்கப் பெற்றுள்ளது.

சொற்பொழிவு நிகழ்த்த வாய்ப்புத் தந்த அன்றைய இயக்குநர் பொறுப்பிலிருந்த பேராசிரியர் முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கு என் அன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சொற்பொழிவினைச் செவிமடுத்துத் தக்க ஆலோசனை கூறிய இதழாசிரியர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களுக்கு நன்றி.

இச்சொற்பொழிவு சிறந்த முறையில் நூல் வடிவம் பெற உதவிய இன்றைய இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு என் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அறக்கட்டளைச் சொற்பொழிவுப் பொறுப்பாளராய் இருந்து அச்சிடும் முன் ஆக்கப் பணிக்குத் துணை நின்ற டாக்டர் ச. சிவகாமி அவர்கட்கும் என் நன்றி உரியது.

அன்புள்ள,

பி. தெட்சிணாமூர்த்தி

* * * *
* * *
* *
*

# செந்தமிழ்ச் செல்வி இதழ்

'முப்போதும் தமிழுக்கே உழைக்கத்தக்க பெருநல்லாள் தமிழ்ப் புலவன் சுப்பையன்' என்று பாவேந்தர் பாரதிதாசனால் பாராட்டப் பெற்றவரும், தமிழ்த் தொண்டையே தொழிலாகக் கொண்டவரும், தமிழ் ஆய்வாளர்க்கு அருங்கருவூலமான மறைமலையடிகள் நூல் நிலையத்தைத் தோற்றுவித்தவரும், மறைமலையடிகளாரின் மாணாக்கராய்த் திகழ்ந்து தனித்தமிழ் உணர்வைச் 'செந்தமிழ்ச் செல்வி' யின் வாயிலாக ஊட்டுவித்தவருமான தாமரைத்திரு செந்தமிழ்ச் செல்வர், பேரவைச் செம்மல் வ. சுப்பையா பிள்ளையவர்களால் தொடங்கப் பெற்றதே தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். தம் தமையனாரும் மறைமலையடிகளாரின் மருகனுமான திருவரங்கனாருடன் இணைந்து நிறுவிய இப்பதிப்புக் கழகம் இதுவரை சற்றொப்ப 1800 அரிய நூல்களை வெளியிட்டுப் பதிப்புத் துறையில் தன்னிகரற்று விளங்குகிறது.

திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலிச் சீமையில் சைவ வேளாளர் மரபில் பாளையங்கோட்டையில் வயிரமுத்துப் பிள்ளை சுந்தரத்தம்மை செய் தவத்தின் பயனாகத் தோன்றிய மக்களில் நான்காமவர் திருவாளர் சுப்பையா பிள்ளை ஆவார். பிறந்த நாள் 22.9.1897. மூன்று வயதில் தந்தையை இழந்தார். 25 வயது முடிவதற்குள் 2 அண்ணன்மார்களையும் ஒரு தங்கையை இழந்தார். தாயார் சுந்தரத்தம்மை, தமையன் திருவரங்கனார் அரவணைப்பில் வளர்ந்தார். 1916இல் பள்ளியிறுதித் தேர்விலும் வெற்றி பெற்றார். 1917இல் அண்ணனைக் காண இலங்கைக்குச் சென்ற திருவாளர் வ.சு. அவர்கள் மறைமலையடிகளாரைக் கண்டு பழகினார். தமிழால் இருவரும் இணைந்தனர்.

மறைமலையடிகள் எழுதிய நூல்களைப் பரப்பும் நோக்கத்துடன் அவற்றை வாங்கி விற்று வந்த திருவரங்கனார் எல்லா நூல்களையும் விற்கும் நோக்கத்துடன் திருசங்கர் என்ற நிறுவனத்தைத் தொடங்கினார். அதுவே பின்னர்க் கூட்டுப் பங்கு நிறுவனமாக, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமாக உருவாக்கப்பட்டது. 1920இல் திருநெல்வேலியைத் தலைமை இடமாகக் கொண்டு கழகம் தொடங்கப் பெற்றது. 1921இல் சென்னையில் கிளை நிலையம் தொடங்கப் பெற்றது. நெல்லையில் அண்ணனும் சென்னையில் தம்பியும் பொறுப்புடன் கழகத்தை நடத்தி

வந்தனர். கூட்டுப் பங்கு நிறுவனத்திற்கு வழிகாட்டியாகத் திரு டி.எஸ்.விசுவநாத பிள்ளை, திரு.எம் திரவியம் பிள்ளை ஆகியோர் அமைந்தனர்.

சைவத்திற்கும் தமிழுக்கும் உழைக்க வேண்டும் என்ற நோக்கில் தொடங்கப் பெற்ற கழகம் தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களையும், சமய நூல்களையும் செம்மையான முறையில் பதிப்பிக்கத் தொடங்கியது. இக்கழகம் வணிக நோக்கில் மட்டும் செயல்படவில்லை. பங்குதாரர் கட்கு 6 விழுக்காட்டிற்கு மேல் ஊதிய வீதம் கொடுப்பதில்லை என்று முதலிலேயே முடிவு செய்தது. இன்றும் இம்முறையே பின்பற்றப்பட்டு வருகின்றது.

கழக வருவாயின் சரி பாதி அறத்திற்கென ஒதுக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து தமிழுக்குத் தொண்டாற்ற தென்னிந்தியத் தமிழ்ச் சங்கமும், சைவத்திற்குத் தொண்டாற்ற சைவ சித்தாந்தச் சங்கமும் என இருவகையான நிலைகளில் கழகம் பணிமேற் கொண்டு செயல்புரிந்து வருகிறது. தமிழ்ச் சங்கச் சார்பில் மறைமலையடிகள் கலை மன்றமும் பிற அற நிலையங்களும் இயங்கி வருகின்றன. சைவசித்தாந்தச் சங்கத்தின் சார்பில் சென்னை மறைமலையடிகள் நூல் நிலையமும் பிற அற நிலையங்களும் செயல்படுகின்றன. இவற்றின் செயல்பாடுகளின் வழிக் கழகம் தொண்டு நிறுவனம் என்பதை உணர முடிகின்றது. வணிக நோக்கம் மட்டுமே நோக்கமாகக் கழகம் கொள்ளவில்லை. உலகில் இப்படியொரு நிறுவனம் அமைக்கப்பட்டு, பணியாற்றி வருவதற்குக் கழகமே முன்னோடியாககும்.

மறைமலையடிகள் வழி நின்று தனித் தமிழ்க் கொள்கையைப் பரப்ப, தமிழ் இலக்கிய, இலக்கண ஆய்வுரைகளை வெளியிட, சைவத்தை வளர்க்க 1923இல் ‘செந்தமிழ்ச் செல்வி’ எனும் திங்களிதழைக் கழகம் தொடங்கியது. இதுநாள் வரை இது சீரும் சிறப்புமாக வெளி வந்து கொண்டிருக்கிறது.

தமிழும் சைவ சமயமும் வளர வேண்டும் எனுங் குறிக்கோளுடன் 1923 ஆம் ஆண்டு முதல் இன்று வரை இடைவிடாது வெள்ளைத் தாளில் வெளிவரும் திங்கள் ஏடு செந்தமிழ்ச் செல்வி. இவ்விதழ் தனித்தமிழ் இயக்கத்திற்கு வலுவூட்டி வருகிறது. இலக்கியம், இலக்கணம், வரலாறு, அறிவியல், வாழ்வியல், கலையியல், மொழியியல், மெய்யியல், ஆய்வியல் எனப் பல்பொருட் கட்டுரைகளைத் தாங்கி வெளிவரும் ஓர் இதழாகும். இவ்விதழின் தோற்றம், வளர்ச்சி, அமைப்பு முதலிய முறைகளை முதற்கண் காண்போம்.

## வாழும் ஏடு

தமிழ்நாட்டில் அச்சுக்கலை 1578இல்தான் அறிமுகம் செய்யப்பட்டது. அறிவியல் வளர்ச்சி காரணமாக இதழியல் துறை தோற்றம் கண்டது. இயந்திரப் புரட்சியால் ஓய்வு கிடைத்தது. மௌன வாசிப்பிற்கும் கருத்துப் பரிமாற்றத்திற்கும் இதழ்கள் உதவின. நாளிதழ்கள் செய்திகளை அறிவித்தன. பருவ இதழ்கள் கருத்துக்களை அறிவுறுத்தின. பொழுது போவதற்குப் பயன்பட்டன. 1831இல் தமிழ்ப் பத்திரிகை என்ற பெயரில் முதன்முதலாக ஒரு மாத இதழ் வெளிவந்தது. 1870 ஆம் ஆண்டு வெளிவந்த திங்கள் இதழான 'ஜநவிநோதினி' சமூகவியல், வரலாறு, நிலநூல் தொடர்பான கட்டுரைகளின் மொழி பெயர்ப்புக்களைத் தாங்கி வந்தது. 1907ஆம் ஆண்டு பாரதியார் 'இந்தியா' என்னும் திங்கள் இதழைத் தொடங்கினார். இவ்விதழ் ஆங்கில அரசின் அடக்குமுறைக்கு உள்ளாகியது. வேதநாயகத்தை ஆசிரியராகக் கொண்ட 'நற்போதகம்' என்ற கிறிஸ்தவ சமய திங்கள் இதழ் 1861 முதல் 1868 வரை வெளி வந்தது. 1866இல் கலாவர்த்தினி, 1877இல் சித்தார்த்த சங்கிரகம் எனத் தோன்றியவையெல்லாம் திங்கன் இதழ்களே. திங்கள் இதழ்கள் பலவற்றின் பெயர்களைத்தான் கேட்க முடிகிறதேயன்றி அவை தொடர்ந்து வந்தனவா என்றால் இல்லை. ஆனால் 1923இல் ஆண்டு தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டு புரிவதைத் தலையாய நோக்கமாகக் கொண்டு தொடங்கப் பெற்ற திங்களிதழ் 'செந்தமிழ்ச் செல்வி' இன்றும் நம் கையில் தவழ்கிறது.

## உயர்தர ஏடு

தமிழறிந்தார் மட்டுமே படிக்கக்கூடிய தரமான இதழ் வரிசையில் இடம் பெறுவது 'செந்தமிழ்ச் செல்வி'யாகும் "ஆழமான பொருள் நிறைந்த, புலமை மிக்கவர்கள் படிக்கக்கூடிய இதழ்களை 'உயர்தரமான' இதழ்கள் என்று கூறலாம். ஆராய்ச்சி இதழ்கள் இப்படிப்பட்டவை. 'செந்தமிழ்ச் செல்வி' தென்மொழி, குறள்மலர், ஆராய்ச்சி ஆகியவை இந்த வகையைச் சேர்ந்தவையாகும்" (எம்.பி. குருசாமி, இதழியல்கலை, பக்.17 - 18)

## கை. சி. கழகத்தின் ஏடு

சைவ சித்தாந்தக் கழகம் அமரர் வ.திருவரங்கனாரால் நிறுவப் பட்டது. 1920 செப்டம்பர் முதல் இன்று வரை இயங்கி வருகிறது. நூற்பதிப்புக்கெனத் தமிழ்நாட்டில் மட்டுமின்றி, பாரதத்திலேயே முதன் முதலாகப் பதிவு செய்யப் பெற்ற கூட்டுப் பங்கு நிறுவனம் ஆகும். 1944 முதல் இந்நிறுவனத்தை ஏற்றுப் பொறுப்போடும் விடாமுயற்சியோடும்

வளர்த்தனர் தாமரைத் திரு வ.சுப்பையா பிள்ளையவர்கள் ஆவார். அவர்களது அயரா உழைப்பால் ஏற்றங்கண்ட கழகம் பல செந்தமிழ்ப் பணிகளைச் செய்து வருகிறது. பழந்தமிழ் இலக்கிய நூல்களும், இலக்கண நூல்களும் இவர்களால்தான் அச்சேற்றப்பெற்றுப் பரவலாக்கப்பட்டன. சென்னையில் மறைமலையடிகள் பெயரால் ஒரு நூல் நிலையம் என்றால் நெல்லையில் மற்றொரு புலவர் சிவஞான முனிவர் பெயரால் ஒரு நூல் நிலையம், பள்ளிகள், நூற்காட்சி மாளிகைகள் எனக் கல்விக்குத் தொண்டுகள் பல புரிந்துள்ளார்கள். செந்தமிழ் இலக்கியப் பணிக்கென ஒரு திங்கள் இதழ் தமையனார் தொடங்கி வைத்ததை இவர்கள் தொடர்ந்தார்கள். இதழாசிரியராய்த் திகழ்ந்தார்கள். இப்போது இவ்விதழின் ஆசிரியர் இவர்களின் மகள் மாப்பியள்ளையான திருவாளர் இரா. முத்துக்குமாரசாமி எம்.ஏ.பி.லிப் அவர்களே.

## இதழின் நோக்கம்

1923ஆம் ஆண்டு சனவரித் திங்கள் வெளியிடப்பட்ட முதல் இதழில் 'நமது பத்திரிகை' என்ற தலைப்பில் இதழாசிரியர் மணி. திருநாவுக்கரசு முதலியார் தலையங்கம் எழுதியுள்ளார். "எனவே நமது 'செந்தமிழ்ச் செல்வி'க்குத் தமிழ் ஒரு கண்ணும் சைவம் மற்றொரு கண்ணுமாகத் துலங்கும் என்பது சொல்லாமே அமையும்." (சிலம்பு 1, பக்கம் 3) என்று குறிப்பிட்டுள்ளார். ஒரு பொருள் குறித்துப் பத்திரிகை நடத்துவது கடினம் என்பதால் தமிழும் சைவமும் தேர்ந்தெடுக்கப் பட்டதாக அவர் கூறியுள்ளார். மொழி, சமயம் ஆகிய இரண்டுமே தலைமைப் பொருள்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## பிற குறிக்கோள்கள்

தனித்தமிழ்த் தந்தைமறைமலையடிகளாரின் கொள்கைகளைப் பரப்புதற்குச் 'செந்தமிழ்ச் செல்வி'யைக் கருவியாக்கினர் கழகத்தார். "தமிழ் வகையில் பழஞ்சங்கச் செய்யுள்கள், புராணம், இதிகாசம், பிற்காலத்துச் சான்றோர் நூல்கள் முதலியவற்றிலுள்ள அரும்பொருள் திறங்களைப் புத்தம் புதிய முறையில் ஆராய்ந்து கூறும். தமிழ் வரலாறு, தமிழ்ப் புலவர் வரலாறு முதலியனவும் அவ்வப்போது எடுத்துரைக்கும். சொல்லாராய்ச்சி, புதுக் கருத்துகளுக்கு ஏற்ற தமிழ்ச் சொல்லாக்கம் முதலியனவும் பேரறிஞர்களால் எழுதப் பெறும். தமிழ் மொழியில் தனித்தன்மையை இனிது விளக்கச் செந்தமிழ்ச் சொற்களே இதனுள் பெரிதும் பெய்துரைக்கப் பெறும். தமிழின் சீரிய நிலையை அரசியலாரும் கல்வித் துறையினரும் அறிந்து உரியன புரியுமாறு கிளர்ச்சி செய்யும். கழகத்தின் தலையான கடனாகிய சைவசமய வளர்ச்சிக்குரிய கட்டுரை

களையும், ஆராய்ச்சி உரைகளையும் வெளியிட்டுச் சைவ சமயத் தொண்டாற்றும்." (செந்தமிழ்ச் செல்வி மணி விழா மலர், பதிப்புரை ப.3)

## பகுப்பு முறை

தமிழ்ப் பெண்ணின் பெயர் தாங்கி, என்றும் செல்வியாக விளங்கும் வண்ணம் செந்தமிழ்ச் செல்வி எனும் பெயரைத் தமிழ்ப் பற்று பணி காரணமாக அமைத்தனர். தமிழன்னையில் காலில் அணியப் பெற்ற சிலம்பு ஆண்டையும் அதனுள்ளிருக்கும் பரல் திங்களையும் குறிக்கும்படி இதழின் பகுப்பு முறை காணப்படுகிறது. பெரும் பகுப்புச் சிலம்பு எனின் சிறு பகுப்பு பரல் ஆகும். பக்க எண்களும் தமிழ் எண்களில் தொடர்ச்சியாக அமையப் பெற்றிருப்பது இவ்விதழின் சிறப்பாகும். இலக்கிய ஏடாதலின் முதற் காப்பியத்தின் மரூஉப் பெயர் இதழின் பெரும் பகுப்பாகவும் கண்ணகியின் நீதிநிலை நாட்டப் பெற்றபோது சான்றாக விளங்கிய பரல் சிறு பகுப்பாகவும் அமைந்துள்ளன.

## சிறப்பு நடைக்குச் சிறுதடை

ஏறத்தாழ எழுபதாண்டுகள் நல்ல தமிழில் சிறந்த நடையிட்டு வந்த செல்வி உலகப் போரின் போது சற்று நின்று செல்ல வேண்டியதாயிற்று. சிறந்த வெள்ளைத் தாளில் செல்வி நடை பயின்று வந்தாள். "1944இல் உலகப் போர் நடைபெற்ற போது எந்த இதழையும் வெள்ளைத் தாளில் அச்சிடக் கூடாது என்று அரசு தடை விதித்தது" (பதிப்புரை ப.4) தரமற்ற தாளில் அச்சிட விரும்பாத ஆசிரியர் 1944 மே முதல் 1947 ஆகஸ்டு வரை இதழை வெளியிடவில்லை. "மற்றபடி செல்வி திங்கடோறும் முறையாக வெளியிடப் பெற்று வருகிறது." (சிலம்பு 50, ப.2) அரசின் கட்டுப்பாட்டுச் சட்டத்தால் மட்டுமே தடைபட்டிருந்ததேயன்றி வேறு எவ்வகையிலும் தடையில்லை.

## இதழாசிரியர் குழுவினர்

இதழைச் சிறப்புற நடத்துதற்கு இதழாசிரியர் குழுவினர் அவ்வப்போது தேர்ந்தெடுக்கப் பெற்றனர். மணி.திருநாவுக்கரசு, மா,வே. நெல்லையப்ப பிள்ளை, ப.சிதம்பரம் பிள்ளை, தமிழ்க் காசு கா.சுப்பிரமணிய பிள்ளை, நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், பண்டிதமணி, மு.கதிரேசன் செட்டியார், டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் போன்ற பேரறிஞர்கள் அன்றைய இதழாசிரியர் குழுவினர்:

சென்னையிலிருந்து வெளிவரும் இவ்விதழுக்கு நாடு முழுதுமுள்ள அறிஞர் பெருமக்கள் ஆசிரியர்குழுத் தலைவர்களாக இருந்ததோடன்றிக் கட்டுரைகளும் எழுதி வந்தனர். ஆசிரியர் குழுவினர் அன்று பல் வேறுபட்ட துறையிலிருந்து கொண்டு பணிபுரிந்துள்ளனர். ஒருவர் வட்டாட்சியர். மற்றொருவர் வழக்கறிஞர். வேறு அரசுப் பணிபுரிந்தோறும் குழுவில் இருந்தனர். இன்றோ அனைவரும் தமிழ்ப் பேரறிஞர்களே யாவர்.

## துறைக்கேற்ற கட்டுரைச் செல்வர்கள்

பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் அறிவியல் செய்திகளைத் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளாகத் தருபவர் அறிஞர் பி.எல்.சாமி ஆவர். மொழியியல் அறிஞர் பா.வே. மாணிக்க நாயக்கரும், மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரும் இலக்கணம், மொழியியல் கட்டுரைகள் வழங்கியுள்ளனர். டாக்டர் மு. வரதராசனாரின் கட்டுரைகள் முதன் முதலாக அச்சேறிய இதழ் செந்தமிழ்ச் செல்வியே. சமய, தத்துவ, இலக்கியக் கட்டுரைகளைப் புதிய கோணத்தில் எழுதியவர் சட்டப் பேரறிஞர் மா. சண்முக சுப்பிரமணியம் ஆவார். இசைப் பேரறிஞர் வீ.ப.கா. சுந்தரனார் இசைத் தமிழை ஆய்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளார். கபசம், மகிழ்நன் என்ற புனை பெயர்களில் க.ப. சந்தோஷம் நகைச்சுவைபட மொழியாராய்ச்சிக் கட்டுரைகள் எழுதினார். மறைமலை யடிகளின் ஆராய்ச்சிக் கட்டுரைகள் செல்வியில் வெளிவந்துள்ளன. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா.இளங்குமரன், டாக்டர் சொ. சிங்கார வேலன், டாக்டர் ந.சஞ்சீவி, டாக்டர் தமிழண்ணல் போன்றோர் ஆய்வுக் கட்டுரைகள் நல்கியுள்ளார்.

## இதழ் தொகுதிகள்

அரிய நூல்களின் விளக்கங்களும், ஆராய்ச்சிக் கட்டுரைகளும் செல்வியில் இடம் பெறுவதால் எக்காலத்திற்கும் தேவை எனக் கருதிக் கழகம் 48 சிலம்புகளைத் தொகுதி, தொகுதியா கட்டடஞ் செய்து வெளியிட்டுள்ளது. ஈழநாட்டிலும், மலை நாட்டிலும், செல்விக்கு வரவேற்பு உள்ளது. தமிழுணர்வுடையார் மட்டும் சந்தா செலுத்திப் படித்து வருவதால் எண்ணிக்கை அளவில் குறைவாகவே வெளிவருகிறது. எனினும் ஏனையோரும் படிக்க வாய்ப்புத் தரும் வகையில் நூற்றொகுதியாகக் கழகம் வெளியிடுகிறது. "இலண்டனிலுள்ள 'பிரிட்டிசு தொல் பொருள் காட்சியக நூலகம்' செல்வி இதழ்கள் அனைத்தையுமே தொடக்க முதல் இதுகாறும் போற்றி வருகிறது. அமெரிக்க நாட்டிலுள்ள ஆய்வு நூலகங்களின் மைய நூலகம் 'செல்வி'த்

தொகுதிகள் அனைத்தையும் நுண்படப் பதிவின் வழி (MICRO FILM) பதிவு செய்து பாதுகாத்து அமெரிக்க ஆய்வறிஞர்கள் பயன்படுத்துவதற்கு உதவி செய்து வருகிறது." (மணிவிழா மலர், பதிப்புரை. ப.5)

## இதழ் அமைப்பு

32 பக்கங்கள் கொண்ட மாத இதழாகச் 'செந்தமிழ்ச் செல்வி' தொடங்கப் பெற்றிருப்பினும் செய்திச் சிறப்பிதற்கு இடம் ஒதுக்கக் கருதி அவ்வப்போது பக்கங்கள் கூட்டப் பெற்றன. இப்போது வெளிவரும் இதழ்கள் 40 பக்கங்களைக் கொண்டிலங்குகின்றன. புறப் பகுதியான அட்டைப் பகுதியில் கலைமகளின் வரைபடம் உள்ளது. உள்ளுறையும் இப்போது வெளிப்பக்கத்திலேயே காணப் பெறுகின்றது. முன் பக்க அட்டையில் உள்பக்கம் இதழாசிரியர் குழுவினர் பெயர் முகவரி இருக்கும். பின் அட்டைப் பகுதியின் இரு பக்கங்களிலும் நூல்களின் பட்டியல் காணப் பெறும். விளம்பரம் இல்லாத இதழாகும். உள்ளடக்கப் பகுதி கட்டுரைகளாலும் கவிதைகளாலும் நிறைந்து காணப் பெறும். இட நிரப்பிகளாகத் துணுக்குகளும், இறுதிப் பகுதியில் செய்திக் குறிப்புகளும் மதிப்புரைப் பகுதியுமாக இவ்விதழ்க் கூறுகள் அமைகின்றன. கட்டுரைகள் இடம்பற்றாக்குறையால் தொடர் கட்டுரைகள், தனிக் கட்டுரை என இருவகைகளில் காணப்படுகின்றன.

## ஆண்டும் மாதமும்

திங்களேடாதலின் ஆண்டு, திங்கள், வெளிவரும் நாள் ஆகியவற்றைக் குறிப்பிடும் போது பெரும்பொழுதான ஆண்டு தொடக்க காலத்தில் தமிழ் ஆண்டு குரோதன, அட்சய என்றும், பின் மெய்கண்டார் ஆண்டு என்றும், இப்போது வள்ளுவராண்டு என்றும் குறிக்கப் பட்டுள்ளது. ஆவணித் திங்கள் ஆனி, தை என்றிருப்பதுடன் ஆங்கில மாதங்களும் அச்சிடப்படுகின்றன. திருக்குறள் கட்டுரைகளுக்கும் செந்தமிழ்ச் செல்விக்கும் நெருங்கிய தொடரபு உண்டு. நீதி விளக்கம் என்ற தலைப்பில் முதற் சிலம்பு பரல் 2இல் ஒரு குறளுக்கு இரு பக்க விளக்கம் இடம் பெறுவது அதற்குத் தோற்றுவாயாகும். கட்டுரையாசிரியர்களின் பெயர்கள் அன்று கட்டுரைகளின் முடிவில் காணப்படுகின்றன. கட்டுரையாசிரியர்களிற் சிலர் கட்டுரையை அனுமதியின்றி யாரும் வெளியிடக்கூடாதென்பதற்காகப் பதிப்புரிமை ஆசிரியர்க்கே என்றிட்டு எழுதினர்.

## செய்திக் குறிப்புகள்

செய்திகள், மதிப்புரைகள் என்ற இரு கூறுகள் அன்றும் இன்றும் ஆரம்ப காலம் (1944 வரை) இக்காலம் (உலகப் போருக்குப் பின்) உள்ளன. எனினும் செய்திகளும் குறிப்புகளும் என்றிணைந்த பகுதிகளும் காணப்படுகின்றன. மதிப்புரை ஒராண்டின் பன்னிரு இதழ்களிலும் காண முடிவதில்லை. மதிப்புரை நூல்களுக்கு மட்டுமின்றிப் பருவ இதழ்களுக்கும் எழுதப்பட்டுள்ளது. உள்ளடக்கத்தில் கட்டுரைகளே உயிர் நாடியாக விளங்குகின்றன. மேனாட்டுத் தத்துவ ஆராய்ச்சி, கிரேக்கத் தத்துவ ஆராய்ச்சி ஆகிய கட்டுரைகள் மொழி பெயர்ப்புக் கட்டுரைகளாக இடம் பெற்றுள்ளன. இசை பற்றிய கட்டுரைகள், மூலநூலும் உரையும் பற்றிய கட்டுரைகள், அறிவியல், வரலாற்றியல் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள் எனப் பல்வேறு தலைப்புகளில் ஆரம்ப காலச் சிலம்புகளில் தனிக் கட்டுரைகளும், தொடர் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. கவிதைகளும் சில இதழ்களில் உள்ளன. அரிய செய்யுள் நூல்கள் சுவடியிலிருந்து செல்வியில் அச்சேறியுள்ளன. பாராட்டு விழா, மணிவிழா, நினைவு மலர், நூல் வெளியீட்டு விழா, இலக்கியச் சொற்பொழிவு மாநாடுகள் பற்றிய செய்திகளிலும் செய்யுள் பகுதி உண்டு. இரங்கற்பாக்களின் தொகுதிகளும் பலவாக இருப்பதால் கவிதையும் ஒரு கூறாக இவ்விதழ்களில் அமைந்தது எனலாம்.

## மா.பொ.சி. கருத்து

'செந்தமிழ்ச் செல்வி' தொகுதிகள் செம்பொருள் நிறைந்து பெட்டகம். நாவீறு படைத்த சான்றோர்களின் கட்டுரைகளில் தொகுப் பாகும். தமிழ் இலக்கியத்தையும் தமிழ் உணர்வையும் பரப்பும் இலக்கிய இதழ்த் தொகுதியாம். தனித் தமிழின் தூய்மை காத்து மொழிக்கு வளம் சேர்க்கும் இதழாகும், சிலம்புச் செல்வி என மா.பொ.சி. இவ்விதழ் குறித்துக் கருத்துக் கூறியுள்ளார்.

"தமிழைப் பயில்வதற்குப் பள்ளிக்குப் போகாதவர்களும், கல்லூரிக்குப் போக முடியாதவர்களும் இதைத் தொடர்ந்து படித்தாலே நல்ல தமிழ்ப் பயிற்சியைப் பெறுவதற்கு இது பயன்படும்" (சிலம்பு 51, பரல் 6)

## வடசொல் வருகை

உலகப் போருக்கு முன்னர் வந்த ஆரம்ப கால இதழ்களில் வடமொழிச் சொற்கள் காணப்படுகின்றன. பத்திராசிரியர் என்று

இதழாசிரியர் குறிக்கப்படுகிறார். சந்தோஷம் என்றே கட்டுரையாசிரியர் பெயரில் உள்ள எழுத்து அப்படியே உள்ளது. பின்னர் வந்த இதழ்களில் கிருஷ்ணன் என்பது கிருட்டிணன் என்றே எழுதப் பெற்றது. அப்போது வழக்கறிஞர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்களும் நாவலர் சோமசுந்தர பாரதியின் மருகரான திரு.எல் கிருட்டிணசாமி பாரதியாரும் வந்திருந்தனர். அனைவரும் நெல்லைச் சந்திப்பிற்கு மகாகவி சுப்பிரமணிய பாரதியாரவர்களை அழைக்கச் சென்றோம் என்று கழகம் வ. சுப்பையா பிள்ளை தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளார். (சிலம்பு 63, ப.5)

## இலக்கியக் கல்வி

"ஆங்கிலக் கலாசாலைகளில் பிரவேச பரிசோதனை வரையுள்ள தமிழ்ப் படிப்பு எளிதான இலக்கியச் சார்புடையதாயும் அதற்கு அடுத்த பரிசோதனைக்குள்ள தமிழ்ப் படிப்பு நடுத்தர இலக்கியச் சார்புடைய தாயும், பி.எ. பரிக்ஷைக்குரிய தமிழ்ப் படிப்பு உயர்தர இலக்கியமாகிய சங்க நூற்சார்புடைத்தாயும் இருத்தற்பாலது. உயர்தர இலக்கிய நயத்தினை அறியப் பெறாதவர்கள் தமிழின் தனியாற்றலை உணர மாட்டாதவராவர்" என்று கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுகிறார் (சிலம்பு 8, பக்.837-838). இலக்கியக்கல்வி எத்துணைச் சிறப்புடைத்து என்பது இதனால் புலனாம்.

"செகப்பிரியர் மில்டனார் முதலிய பெரும் புலவர்களது நூல்களின் சுவையறியாது ஆங்கிலப் பல்கலைக் கழகத்தில் ஆங்கில மக்கள் பிறவற்றைப் பயின்று வெளி வருவதை ஆங்கில நாட்டினர் விரும்பாமை போலத் தமிழ் நாட்டுப் பல்கலைக்கழகத்தில் தமிழ் உயர்தர இலக்கியச் சுவையை அறியாது தமிழ் மாணவர் பிறவற்றை மட்டும் பயின்று வெளிவருதலைத் தமிழ் நன்மக்கள் விரும்பார் என்க" என்று காசுப்பிள்ளை கூறுவதிலிருந்து (சிலம்பு 8, ப.838) இலக்கியக் கல்வியின் இன்றியமையாமை விளக்கப்படுகிறது.

## பிற இதழ் கட்டுரை எடுத்தாளல்

இன்று மஞ்சரி என்ற இதழில் வெளிவரும் பல கட்டுரைகள், கதைகள் பிற இதழ்களிலிருந்து எடுக்கப் பெற்றும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. செந்தமிழ்ச் செல்வியும் தனக்கு முன் விவேக சிந்தாமணியில் வெளியிட்ட பல கட்டுரைகளைத் தன் இதழில் தாங்கி வந்துள்ளது. சான்றாக மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை எழுதிய, "புஷ்பங்களும் அவற்றின் தொழிலும்" என்ற தொடர் கட்டுரையைச் சுட்டலாம். அவரின் பயிரினப் பற்றும் அறிவும் வெளிப்பட அமைந்த அத்தொடர் கட்டுரை (சிலம்பு 8, ப.814) நடை, அவ்வரை இனம் காட்டுகிறது.

தமது நாடகத்தில் இயற்கையைப் பற்றிச் சிந்திக்கும் ஒரு பாத்திரத்தை அவர் படைத்திருப்பதும் இதனால் விளங்கும். "ஜீவராசிகளுடைய பொதுவான இருபெருங் குணங்களில் முதலாவதான ஆஹார சுவிகார விருத்தி மரவர்க்கத்தில் நடந்தேறும் இயல்பை முன் சஞ்சிகையில் ஒருவாறு கூறி முடித்தோம் அல்லவா. இப்போது அம்மர வர்க்கங்கள், தங்கள் தங்கள் ஜாதிக்கேற்றபடி தங்களுக்குப் பிரதிநிதியாகப் பிற்கிளையுண்டு பண்ணிவிடும் ஜீவராசிகளின் இரண்டாம் இலக்கணமாகிய பிரத்தியுத்பாதனம் என்னும் தொழிலை எவ்விதம் நிறைவேற்றுகின்றன என்று சற்றே ஆராய்வோமாக." இந்நடையில் வடமொழிக் கலப்பு உண்டு. பிற இதழ்க் கட்டுரையானதால் செந்தமிழ்ச் செல்வி தனதாக்கி வெளியிடவில்லை.

## இடநிரப்பி

இடநிரப்பிகளில் சிந்தனையைத் தூண்டும் புதிர்த் துணுக்குகளும் உள்ளன. 'மலைபு வினாக்கள்' என்ற தலைப்பில் தமிழ் என வடிவங்களை மனத்தில் பதிக்கும் வண்ணம் புதிர்கள் அமைகின்றன.

"ஒன்றும் ஐந்தும் என்ன நிறம்? கருநிறம்
எந்த எண் பயிர்களை நன்கு விளையச் செய்யும்? எரு"
(சிலம்பு 14 பரல் 6)

எழுத்து விடுதலையில் அமையும் புதிர்.

"ஆட்டுத் தலையும் பூனை வாலும் சேர்ந்து என்னவாகும்? ஆனையாகும்" என்பதாகும்.

தமிழ் எண்ணில் அமைந்த சொல்லையும் ஆங்கிலச் சொல்லின் தமிழ் வடிவத்தையும் இணைத்த புதிர்,

"பறவைகள் எல்லாவற்றிலும் நிறை மிகுந்த பறவை எது?

15டன் - கருடன்"

பெயராய்வு நிகழ்த் தூண்டும் வகையில் மற்றொரு துணுக்கு ஆங்கில ஆசிரியரின் மேற்கோளில் அமைகிறது.

"பண்டைக் காலத்திலிருந்து இறந்த மொழி
களின் பொருட்செறிவையோ, இற்றை நாளில்
வழங்கும் மொழிகளின் பொருட் செறிவையோ,

அறிவதற்கு மக்கள்தம் பெயர்களும் ஊர்களின்
பெயர்களுமே மக்கட்டொகுதியால் உதவப்படும்"
சர்.டி.பிலிப்ஸ் (சிலம்பு 14 பரல் 6)

மலைபுச் சொற்றொடர்த்துணுக்கு,

"எா எா டாடா நீநீ கொண்டு வந்தமாடு
இருளா இருடா இருநீ சிறுசா பெரிசா"

அறிஞர் நூல்களிலிருந்தும் கருத்துகள் பக்கத்தை நிறைக்கத் தரப்பட்டுள்ளன. பஞ்ச மரபு சங்க கால இசைநூல் பற்றிய ஆய்வுக் கட்டுரை முடிந்ததும் எஞ்சியுள்ள இடத்தில் இசையுடன் தொடர்புடைய பண் பற்றிய செய்தியைத் துணுக்காக அமைத்துள்ளனர். உ.வே. சாமிநாதையரின் நல்லுரைக் கோவை 3 ஆம் தொகுதியிலிருந்து கருத்து கூறப்படுகிறது.

"பண்கள் பலவகைப்படும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனப்பெரும் பண்கள் ஐந்து இவற்றின் பகற் பண்கள் முதலியனவும் அவ்வப் பொழுதிற்கமைந்த பண்களும் யாமங்களுக்குரியனவும் எனப் பலவகையுண்டு. புறநீர்மை முதலிய பன்னிரண்டு பண்கள் பகற் பண்கள் எனப்படும். தக்கராக முதலிய ஒன்பது பண்கள் இராப் பண்கள் எனப்படும். செவ்வழி முதல் மூன்று பொதுப் பண்களாம். காலைக்குரிய பண் மருதம், மாலைக்குரியது செவ்வழி என்பாரும் உளர்"

நல்லுரைக் கோவையைப் படிக்காதவர்க்கு இத்துணுக்குப் படிக்கத் தூண்டும். பேரறிஞர்களின் பழைய உரைநடை இலக்கியங்களைப் படிக்கத் தூண்டும் வகையில் துணுக்கு அமைந்துள்ளது.

அறிவுக்கு விருந்தளிக்கும் துணுக்காக அமெரிக்காவில் பல நூற்றாண்டுகட்கு முன்னுள்ள சிவன் கோயில் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. (சிலம்பு 16 பரல் 2)

விடுகதை வடிவில் துணுக்கு

ஆற்றிலே பிறந்து ஆற்றிலே வளர்ந்து
ஆற்றிலே வாழும் ஆற்று மீனே எல்லா
ஆறிலும் பொல்லா ஆறு எது? அழுக்காறு

(சிலம்பு 15 பரல் 10)

போன்மையாக்கம் வழி இது போன்று மற்றொன்று

பூவிலே பிறந்து பூவிலே வளர்ந்து
பூவிலே வசிக்கும் பூநாகமே எல்லாப்
பூவிலும் பொல்லாப் பூ எது? எரிப்பு (சிலம்பு 15 பரல் 10)

இப்போன்மையாக்கம் படிப்பவர்க்கும் இது போன்று ஒன்றை உருவாக்கும் சிந்தனையைத் தூண்டுகிறது.

மறைமலையடிகளின் பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையிலிருந்து செய்யுளின்பம் என்ற தலைப்பில் கருத்துகளைத் தரும் இட நிரப்பியும் உண்டு. மறைமலையடிகளின் உரைமணிக் கோவை, டி.எல்.வைத்திய நாதனின் நவமணிகள் என்ற நூல் பகுதி எனத் தரமானதும் இதழ் நோக்கத்திற்கு ஏற்புடையதுமான துணுக்குகளையே செல்வியில் காண முடிகிறது. வட்டார வழக்குச் சொல் விளக்கமும் இடநிரப்பியில் உண்டு. ஒன்றைக் கண்டிப்பாகச் செய்யக் கருதினால் கட்டாயம் என்ற சொல்லை நெல்லையார் வழங்குவது மரபு. பாவாணரின் சொல்லாய்வுக் கட்டுரையிலிருந்து மேற்கோளாக இச் சொல் விளக்கம் இட நிரப்பியாக இடம் பெறுகிறது. (சிலம்பு 64 பக்கம் 381) சிறிதளவு இடம் இருப்பினும் அதனையும் படிப்பவர்க்குப் பயனுள்ளதாக்கவே செல்வி முயல்கிறது.

## மரபு போற்றல்

"நம் செல்வியில் வெளிவரும் கட்டுரைகளனைத்தும் இலக்கண, இலக்கிய மரபு வளங்குன்றாமல் உயரிய இலக்கிய நடை தழுவி வரக் காணலாம். மேலும் பல்வேறு வகையான ஆய்வுக் கட்டுரைகள் சிக்கறுத்துச் செம்மையாக்கப்பட்டு ஆய்வாளர்க்கு ஏற்படும் மலைவுகள் அகலத் துணை புரிந்து வருகின்றன. பெரும்புலவர் வரலாறுகளும், பொது நெறியுண்மைகளும், செந்நெறி மாண்புகளும் சிறக்கத் தாங்கித் திகழ்கின்றன" (சிலம்பு 38 ப.11) ஆங்கில நாளிதழ் ஒன்றை நாள்தோறும் படித்து வந்தால் ஆங்கில மொழி எழுதப் பேச இயல்பாக வரும் என்பது போலச் செந்தமிழ்ச் செல்விக் கட்டுரைகளைப் படித்து வந்தால் இலக்கணம் பயிலத் தேவையில்லை. தானாக வல்லொற்று மிகுமிடம் மிகாவிடம் மனத்தில் பதிந்துவிடும்; பிழையறத் தமிழை எழுதலாம்.

## கொள்கை பரப்பும் இதழ்

"சைவ சமயத்தின் பெருமையையும் தமிழ் இலக்கிய நூல்களின் சுவையையும் மக்கள் அறிந்து அனுபவிக்க வேண்டும் என்றும், அதற்காக நூல்கள் பதிப்பிக்கப்பட வேண்டும் என்றும் எண்ணி இக்கழகம் 1920 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது" (சிலம்பு 48, ப.6) சைவ சித்தாந்த நூற்

பதிப்புக் கழகத்தின் அதே குறிக்கோள்தான் செந்தமிழ்ச் செல்விக்கும் ஆகும். கழகத்தை நிறுவிய தாமரைத் திரு வ.சுப்பையாப் பிள்ளை எந்தக் கருத்தோடு நூற்பதிப்புக் கழகத்தைத் தொடங்கினாரோ அந்தக் கருத்தோடுதான் செந்தமிழ்ச் செல்வியையும் வெளியிட்டு வந்தார். ஒரு நிறுவனமாக நின்று செயல்பட்டது ஒன்று. மற்றொன்று இதழாக அமைந்து இயங்கியது. சங்க நூல்களையும் சிறப்பாகத் திருக்குறளையும் பலவகைகளில் உலகிற்கு உணர்த்திப் பரப்பிட வேண்டும் என்ற கொள்கையுடன் செந்தமிழ்ச் செல்வி தொடங்கப் பெற்றது. ஆதலின் இவ்விதழ் ஒரு கொள்கை பரப்பு இதழாகவும் திகழ்கிறது.

## அரிய இலக்கிய ஏடு

"தமிழ் ஆய்வுகளைப் பற்றிய கட்டுரைகள் வந்து கொண்டிருக்கின்ற ஒரே பத்திரிகை செந்தமிழ்ச் செல்வி. மறைந்த இலக்கியங்களைச் செந்தமிழ்ச் செல்வி எடுத்துத் தருகின்றது" என்று ச.வே. சுப்பிரமணியம் கூறியுள்ளார் (சிலம்பு 50 ப.48).

## முதல் நிறுவனம்

இந்தியாவில் ஒரு கூட்டுப் பங்கு நிறுவனம் என்ற முறையில் முதன் முதலாகப் பதிவு செய்யப் பெற்ற சைவ சித்தாந்தக் கழகம் 1920 முதல் இன்று வரை ஒழுங்காக இயங்கி வருகின்றது. நிறுவனர் திருவாளர் வ.திருவரங்கனார் 1944இல் மறைந்த பின் அவரது இளவல் சுப்பையா பிள்ளை பொறுப்பாக நடத்தி வந்தார். அவரது மறைவுக்குப் பின் அரவது மகள் மாப்பிள்ளை திரு.இரா.முத்துக்குமாரசாமி பொறுப்பேற்று நடத்தி வருகிறார். கட்டடம் செய்யப் பெற்ற 48 சிலம்புகள் கலைக் களஞ்சியம் போல் ஆராய்ச்சியாளர்க்குப் பயன்பட்டு வரும் திங்கள் இதழாக விளங்குவது செந்தமிழ்ச் செல்வி.

## காழ்ப்பின்மை

சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்யும் இதழ். எனினும் புறச் சமயக் காழ்ப்பு இல்லை. மாறாக இசுலாமியரின் ஈமான் பற்றிய நூல் மதிப்புரை உண்டு. விவிலியச் சிறப்பை விளக்கும் கட்டுரையும் உண்டு. விவிலியம் என்பதன் விளக்கம் யாவரும் அறிந்து கொள்ளும் பாங்கில் அமைந்துள்ளது. கா. சுப்பிரமணிய பிள்ளையே அதனை விளக்குகிறார். "கிறிஸ்தவர்களுடைய விவிலிய நூல் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்னும் இரண்டு பகுதிகளையுடையது. பழைய ஏற்பாடு பெரும்பாலும் மகமதியர்களாலும் ஏற்றுக் கொள்ளப்படுவதே. பழைய ஏற்பாடு மோசஸ் என்னும் யூதப் பெரியாராலும் தாவீது சாலமன்

முதலிய யூத அரசர்களாலும் இயற்றப்பட்ட சிறு நூல்கள் பலவற்றின் தொகுதியாகும். புதிய ஏற்பாட்டில் முதல் நான்கு பகுதியும் கிறிஸ்து நாதரின் நான்கு சீடர்களால் இயற்றப்பட்டவை. அவை பிற பகுதிகளிலும் சிறப்பாகக் கொள்ளப்படும். அவை கிறிஸ்துவின் சரித்திரத்தை நன்கு விளக்குவன" (சிலம்பு 5, ப.261).

"செந்தமிழ்ச் செல்வியில் அறிவியற் கருத்துக்களையும் இலக்கியக் கருத்துக்களையும் கட்டுரை வடிவில் முதன் முதல் எழுதி வந்தார்கள்" (53:487). அவை நூல்களாக வெளியிடப்பட்டன. "பின்னர்த் தொடர்ச்சியாகச் செல்வியில் இடையிடையே கட்டுரைகள் எழுதுவதோடு கழகம் விரும்பும் தலைப்புகள்ளில் நூல்களும் எழுதி வரலாயினர்" (மேலது)

புலவர் புகழ் வளர்த்த கழகம் 1, 2ஆகிய கட்டுரைகள் தமிழ்ப் புலவர் வரலாறு எழுதப்பயன்படுவன. (53:457, 505, 553) மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையின் தமிழ்த் தாய் வணக்கச் செய்யுள் தமிழினத்தின் பள்ளி எழுச்சிப் பாடலாகும். மறைமலையடிகளாரின் கருத்துக்களைப் பரப்பும் திங்கள் ஏடு செந்தமிழ்ச் செல்வியாகும். பல்கலைப் புலவர் பேராசிரியர் கா.சு. பிள்ளை ஆங்கிலம், தமிழ், சட்டம் ஆகிய துறைகளில் வல்லுநர், ஆராய்ச்சி வன்மை உடையவர். பொறியியல் வல்லுநர், மொழியியல் அறிஞர் பா.வே. மாணிக்க நாயக்கர் தொடர்பு செந்தமிழ்ச் செல்வியை மொழியியல் துறையில் வளர்படுத்தியது. இவருடைய சொற் பொழிவுகள் எழுத்துருப் பெற்றன. கட்டுரைகளும் செல்வியில் வெளி வந்தன. தஞ்சை மாவட்ட நடுக்காவேரி சிற்றூரில் பிறந்த மு.வேங்கட சாமி நாட்டார் செல்வி வழியும் தமிழ்ப் பணிபுரிந்துள்ளார்.

செந்தமிழ்ச் செல்வி குறிக்கோளுக்காக நடத்தப்படும் இதழ். செல்வி செய்யும் உதவி தமிழுக்குச் செய்யும் தொண்டாகும். புல்லிய செய்திகளில்லை. போலிக் கதைகள் வருவதில்லை. புறக் கவர்ச்சி இல்லாத இதழ், மொழி, மொழி பேசும் மக்கள், கலை, நாகரீகம், பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் குறிக்கோளுடன் ஆரம்பிக்கப் பட்ட இதழ். அறிஞர் பெருமக்களால் எழுதப்படும் கட்டுரைகளைத் தாங்கி வெளிவரும் இவ் இதழ் ஈராயிரம் படிகளுக்கு மேல் அச்சடிக்கப் படவில்லை.

மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை என்பதொரு பட்டியல் பிற்கால இதழ்களில் காணப்படுகிறது. பின் அட்டைகளில் கழக வெளியீடுகள் பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள் விலைப் பட்டியலுடன் தரப்படிருப்பது நூல் கற்போருக்கும் ஆய்வாளருக்கும் துணையாகும்.

இரா. முத்துக்குமாரசாமி ஆசிரியர் பொறுப்பேற்ற பின் முகப்புப் பகுதி மாற்றப்பட்டுள்ளது. முன் அட்டையின் உள் பக்கம் நிறுவனர், இதழாசிரியர் குழுவினர், ஆசிரியர் பெயர்களும் உள்ளுறையும் இடம் பெற்றுள. பக்க எண்கள் தொடர்ச்சியாகவும் தமிழ் எண்ணிலும் இடப் பட்டு வெளிவருவதைக் காண முடிகிறது. ஆரம்பக் காலத்தில் இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள் என்ற பெயர்ப் பட்டியல் மட்டுமே காணப்பட்டது. இப்போது இதழாசிரியர் குழு என மாற்றப் பட்டிருப்பதும் நிறுவனர் தாமரைச் செல்வர் வ.சுப்பையா பிள்ளை என்றும் ஆசிரியர் இரா. முத்துக்குமாரசாமி என்றும் தனியே குறிப்பிட்டிருப்பதும் மாற்றமாகும்.

## மதிப்புரைகள்

1923ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் வெளிவந்து கொண்டிருக்கும் நற்றமிழ்த் திங்கள் ஏடு செந்தமிழ்ச் செல்வி. இரண்டாம் உலகப்போரின் போது வெள்ளைத் தாள் கிடைக்கப் பெறாமையால் 28 மாத இதழ்கள் வெளிவரவில்லை. இவ்விதழ்க் கூறுகளில் ஒன்று மதிப்புரை எனினும் அனைத்து இதழ்களிலும் இக்கூறு இடம் பெறவில்லை. மதிப்புரை இடம் பெற்ற இதழ்களைத் தொகுத்துக் கண்டால் தமிழ் இதழ்களும், இலக்கண, இலக்கிய நூல்களுமே இப்பகுதியில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. அவற்றைப் பகுத்துக் காண்பதன் வழிச் செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியத் தரம் புலப்படும். தமிழ் இலக்கிய வரலாறு எழுதுவோருக்கும் பயன்படும்.

நாளிதழ், வார, இதழ், திங்களிதழ் போன்ற பருவ இதழ்கள், கைப்பிரதிகள், துண்டுபிரசுரங்கள், வயித்தியம், சமயம், இலக்கண உரைகள், இலக்கிய நூல்கள் எனப் பல்வகை நூல்கள் மதிப்புரையில் இடம் பெற்றுள்ளன. சிற்றிலக்கிய வகை நூல்கள், சமயத் தத்துவச் சார்புடைய நூல்கள், மொழியாக்க நூல்கள், நினைவு மலர்கள், மொழி பற்றிய நூல்கள் எனப் பல்வகை நூல்கள் 1923 முதல் இன்று வரை வெளிவந்தவைகளுள் செந்தமிழ்ச் செல்வியில் மதிப்புரைக்கென அனுப்பப்பட்டன யாவும் இப்பகுதியில் விளக்கம் பெறுகின்றன.

தமிழ்நாட்டிற்கும் யாழ்ப்பாணத்திற்கும் 1923 முதல் நாடு விடுதலையாகும் வரை உள்ள தொடர்பால் யாழ்ப்பாணத் தமிழ் அறிஞர்களின் நூல்கள் மதிப்புரைக்கும் அனுப்பப்பட்டுள்ளன. அங்குத் தொடங்கப் பெற்ற இதழ்களும் மதிப்புரைப் பகுதிக்கு வந்துள்ளன. யாழ்ப்பாணத்திலிருந்து தமிழ் இலக்கிய இதழாக அன்று வெளிவந்த திங்கள் ஏடு தமிழன் என்பதாகும். இனஇதழ் என்ற அடிப்படையில் தனவணிகன், வேளாளமித்ரன் போன்ற மாத இதழ்கள் தமிழகத்தில்

வெளி வந்துள்ளன. சமயச் சார்பான மாத இதழாக வெளிவந்த இதழ் காங்கேயநல்லூர் குகன் கிருபானந்தவாரியாரால் தொடங்கப் பெற்ற திருப்புகழமிர்தமாகும்.

இராமநாதன் எழுதிய 'தமிழினிமை,' புலவர் இராமகிருட்டிணன் எழுதிய 'நோயின்றி வாழ முடியாதா?,' மணிவாசகன் எழுதிய 'செந்தில் முருகன் சிரிக்கின்றான்,' சரஸ்வதி வேணுகோபால் & மு. இராமசுவாமி எழுதிய 'கள ஆய்வில் சில அனுபவங்கள்,'கலைக்கூத்தனின் 'பூங்கோதை,' ஜி. வரதராஜனின் 'திருமந்திரநெறி,' டாக்டர் சொ. சிங்காரவேலனின் 'அப்பர் அருட்செய்தி,' மறைமலையடிகள் பற்றிய அடிகள் நூற்றாண்டு விழா வெளியீடு, எழிலனின் 'வாகைப் பூக்கள்,' மு.வை. அரவிந்தனின் 'தமிழக நாட்டுப் பாடல்கள்'சென்னை கிறிஸ்தவக் கல்லூரி ஆசிரியர் மூவர் தந்த கல்வெட்டு எழுத்துக்களில் திருக்குறள் வட்டெழுத்தில் திருக்குறள், இரா. மதிவாணன் எழுதிய 'இலெமுரியா முதல் அரப்பா வரை,' ச. தண்டபாணி தேசிகனின் 'வள்ளுவரும் கம்பரும்,' சிவப்பிரகாச தேசிகரின் 'திருமந்திரமாலை முந்நூறு உரையும் விளக்கமும்,' வெள்ளை வாரணனாரின் 'பன்னிரு திருமுறை வரலாறு' (முதற் பகுதி), 'திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் மூலமும் உரையும்,' குருவிக் கரம்பை சண்முகத்தின் 'பூத்தவெள்ளி' (கவிதைகள்), மா. இளங்கண்ணன் தந்த 'நெடுங்காத அலைகள்,' 'நற்றிணை தந்த ஓ அன்றில் பறவைகளே,' 'மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்,' 'தமிழும் தத்துவமும்,' 'ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம்,' 'அபிராமி அந்தாதி தெளிவுரை,' 'மனமாற்றம் வரலாற்று நாடகம்,' 'திருமுருகொம்பாவை உரையுடன்,' 'அழகாபுரி சுப்பிரமணிய சுவாமி பிள்ளைத் தமிழ்'போன்ற நூல்கள் அறிமுகம் ஆவதால் தமிழ் இலக்கியம் கற்க விரும்புவோர்க்குப் பெரிதும் துணையாகிறது. அரிய நூல்கள் இவற்றில் உள.

கோலாலம்பூரில் திங்கள் இதழாக வெளிவரும் தமிழ்நேசன் செந்தமிழ்ச் செல்வியில் மதிப்புரைப் பகுதிக்கு வந்துள்ளது. (சிலம்பு 2)

மதுரையிலிருந்து வெளி வந்த 'தமிழரசு' என்ற திங்கள் இதழ் பற்றிய குறிப்பு மதிப்புரையில் உள்ளது (சிலம்பு 2) நீதி, இசை, வைத்தியக் குறிப்பு நவீனகம் முதலிய அம்சங்களைக் கொண்ட இதனாசிரியர் சீனிவாச அய்யங்கார்.

மு.நடேச முதலியார் எழுதிய திலகவதியார் என்ற நூல் தமிழகத் தாய்மார் வரலாறு என்ற வரிசையில் முதன்மையானது. இந்நூல் மதிப்புரையில் உள்ளது.

பண்டிதமணியின் உதயண சரிதம் ஓர் உரைநடை நூலாகும். தாவூத்சா எழுதிய ஈமான் என்ற இசுலாமிய மார்க்க விளக்க நூல் பற்றிய குறிப்பும் மதிப்புரையில் வந்துள்ளது. நாக.முத்தையாவின் குழந்தைப் பாடல் சிறுவர் இலக்கியமாகும் (சிலம்பு 35) சிவபூசை என்ற நூல் கோவில் வழி பாட்டுமுறையை விளக்கும் நூலாகும்.

திருவள்ளுவர் காவியம் என்ற நூலைத் தந்தவர் அ.கிருஷ்ணசாமி நாயுடு செந்தமிழ் நடையில் அமைந்த கட்டுரை.

பருந்தும் நிழலும் என்ற நூலைப் பாலகிருஷ்ணன் எழுதியுள்ளார். இந்நூலுக்கு மதிப்புரை தந்தவர் கா. சுப்பிரமணிய பிள்ளை. அவர் எழுதிய மதிப்புரை ஆய்வாளர்க்கு ஒரு முன்னோடிக் கட்டுரையாகும். இயல் தோறும் உள்ள செய்திகள் மதிப்பிடப்படுகின்றன. இந்நூலானது ஆங்கிலத்தில் விழுமிய கருத்துக்கள் பொதிந்த உயர்ந்த கட்டுரைகளைச் செந்தமிழ்ப் பாநல முறை மொழி பெயர்க்கு முறையினை இனிதெடுத்து விளக்க வந்த முதல் நூலாகத் திகழ்கின்றது. ஒவ்வொரு புலவரது வாழ்க்கை வரலாறும், அவரியற்றிய நூற்றொகையும் மொழி பெயர்க்கப்பட்ட அவரது கட்டுரையின் வழியும், கருத்தும், சுருக்கமும், அரும்பொருள் விளக்கமும் இறுதியிற் சேர்க்கப்பட்டிருப்பதாலும் இந்நூலானது பல்கலைக் கழக மாணவர் ஆராய்ச்சியொடு கற்றற்குரிய முறையில் அமைக்கப்பட்டுள்ளது. (சிலம்பு 6, ப.318) கொட்டாரக் கரையிலிருந்து வெளிவந்த அகஸ்தியன் என்ற திங்கள் ஏடு குறித்த மதிப்புரைகள் அன்றிருந்த திங்கள் இதழ்கள் குறித்து அறிய வழி வகுக்கின்றன. காரைச் சிவனடியார் கூட்டத்தார் என்ற தலைப்பில் துண்டுப் பிரசுரங்கள், கா.நமசிவாய முதலியார் எழுதிய திருஞான சம்பந்தர் நூல் பற்றிய குறிப்புகளையும் மதிப்புரைப் பகுதியில் காண முடிகின்றது.

மேனாட்டுத் தத்துவ ஆராய்ச்சி, கிரேக்கத் தத்துவ ஆராய்ச்சி போன்ற கட்டுரைகள் பிறமொழிகளிலிருந்து மொழியாக்கம் செய்த பகுதிகளின் சுருக்கமேயாகும். இதழ்கள் நோக்கத்திற்கு ஏற்ப இக்கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இசை பற்றிய கட்டுரைகள், தாளசமுத்திரம் என்ற மூலநூலும் உரையும் ஆடிமாத இதழில் (சிலம்பு 1 : 7) இடம் பெற்றிருப்பது முத்தமிழ் போற்றும் தன்மையைக் குறிக்கும். மொழிகள் வெளியிடுமுண்மை என்ற தலைப்பில் அமைந்த தொடர் கட்டுரை இலக்கணச் செழுமையை வெளிக்காட்டும். வேலூர் ஊரில் கல்விக்கூட ஆசிரியர் க.ப. சந்தோஷம் சொல்லாராய்ச்சி நிகழ்த்தியுள்ளார். நிறை, ஆடவர் மகளிர் ஆகிய இருபாலார்க்கும் பொதுவான ஒரு பண்பாகும். "அறிவு, ஓர்ப்பு, நிறை,

கடைப்பிடி என்பன தலைமகனுடைய பகுதிகளாகும். தலைமகளுக்குக் கூறியவற்றில் 'நிறை' ஒன்றாகவிடினும் 'மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை' என்று சொன்னதால் பெண்களுடைய நிலை தவறா ஒழுக்கமும் நிறை எனப்படுமென்க. 'நிறையழிதல்' என்ற தலைப்புடைய திருக்குறட் பகுதியும் மேற்கூறியதை வற்புறுத்தும்" என்று க.ப. சந்தோஷம் முதற் சிலம்பு பரல் 8இல் கூறியுள்ளார்.

'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்' என்ற பாடல் இதழ்தோறும் (1923 ஆம் ஆண்டு) முதற் பக்கத்தில் காணப்படுகின்றது. ஓராண்டு முடிவுற்றதும் 'நமது செல்வி' என்ற தலைப்பில் தலையங்கம் எழுதப் பட்டுள்ளது. மார்கழித் திங்கள் முடிவதால் 1923ஆம் ஆண்டு டிசம்பர் 1924ஆ சனவரி மீ என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தைத்திங்கள் தொடங்கப் பெற்ற இதழாகும்.

"நமது செல்விக்கு இத்திங்களுடன் ஓராண்டு முடிவு பெறுகின்றது. இத்திருமகள் சைவ சிந்தாந்தக் கழகமாகிய திருப்பாற்கடலிலே தோன்றிச் செந்நாப் புலவர் பொருளாகிய தீம்பால் ஊட்ட வளர்ந்து, நல்லறிஞர் கையகத்தே செய்யதான் அழுந்தப் பொருந்திக் கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்து இன்ப மகிழ்ச்சி எவர்க்கும் விளைத்து வந்தனள். நமது செல்வி காலத்தாழ்வு என்னும் பேய் பிடியாமலும் கைப்பொருளின்மை என்னும் பறவை பறவாமலும் எடுப்பார் பிடிப்பார் இவரென்னும் இலம்பாடு மேலாமலும் செழுங்குடிப் பிறந்த செல்வப் பாவையாச் சிறந்து ஓராட்டைப் பருவம் உற்றனள்" (சிலம்பு 1 : பரல் 12 பக் 417-418) என்று இதழாசிரியர் எழுதுவதில் செந்தமிழ் நடையைக் காண முடிகின்றது. இலக்கணப் புணர்ச்சி விதிகளுக்கேற்ப சொற்கள் புணருமுறையில் எழுதப்பட்டுள்ளது. உரைநடையிலும் உருவகங்களைப் பயன்படுத்தி யுள்ளார். எதுகையும் மோனையும் இந்நடையில் உள்ளன.

## தமிழ் இலக்கிய ஆய்வுச் சிந்தாமணி

சிறிது தமிழ் கற்றாரும் எளிதில் புரிந்துணரும்படி எளிய இனிய உரைநடையில் கட்டுரைகள் எழுதப்படுகின்றன. ஆரம்ப முதல் தொகுதியாய்க் கட்டம் செய்து பார்த்தால் அபிதான விளக்கம் (Encyclopadea) போலப் பயன்படும், எல்லாப் பொருளும் இதன்பாலுள, இதன் பாலில்லாத பொருள் எதுவுமில்லை என்னுமாறு இலக்கிய ஆய்குக் கட்டுரைகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன.

'செல்வி' பாலுண்டு உடலுரம் பெற்று வளரத் தமிழரசரும், தமிழ்ச் செல்வரும், தமிழ் மடாதிபதிகளும் ஏனைய தமிழ்ப் பெரு மக்களும் முன்வருவாராயின் அரும்பெரும் புலவர் பலர் அவட்குப் புத்தாடை

புனைவர், அணிபல அணிகுவர், கண்டோர் கண்ணும் நெஞ்சம் கட்டுண்ணுமாறு நமது 'செல்வி' கவின் கனிந்து இலங்குவள். இவ்வண்ணம் எமது 'செந்தமிழ்ச் செல்வி'யை உலகம் சீராட்டிப் பயன் எய்துமாறு எல்லாம் வல்ல முழு முதற் பெருமான் இன்னருள் முகிழ்ப் பானாக. "இங்ஙனம் பத்திராசிரியர்" (முதற் சிலம்பு.5) இதழாசிரியர் என்று குறிப்பிடப்படாமல் பத்திராசிரியர் என்றே இங்குக் குறிக்கப்பட்டுள்ளது காலத்தின் செல்வாக்கேயாகும்.

மொழியும் சமயமும் குறித்த கட்டுரைகள் இடம் பெறும் எனக் கூறப்பட்டிருப்பினும் மொழியில் இலக்கியச் சார்புடைய கட்டுரைகளே மிகுதியாக இடம் பெற்றுள்ளன. தமிழ் இலக்கியப் பணியில் தலைமைச் சான்றெனத் தோன்றும் வண்ணம் இவ்விதழ் விளங்குகிறது. ஒரு பொருள் பற்றி (தமிழ் மொழி) இதழ் நடத்துவது சிறப்புடையது. எனினும் நாட்டின் நிலமை நோக்கி மொழி, சமயம் ஆகிய இரு பொருள்களையும் தலைமைப் பொருள்களாகக் கொண்டு இதழ் தொடங்கப் பெற்றதென ஆசிரியரே கூறியுள்ளார். "ஒரோவொரு பொருள் பற்றி மட்டும் பத்திரிகை நடத்துதல் மேதக்கரேனும், நமது நாட்டின் நிலைமையை நோக்கின் அது நடைபெறுதல் அரிதெனத் தோன்றுகிறது. ஆதலின் மொழி, சமயம் என்னும் இரண்டு பொருள்களையும் தலைமைப் பொருள்களாக ஒருங்குகோடல் இன்றியமையாததாயிற்று" (சிலம்பு 1 ப.3)

இலக்கியப் பணியில் இவ்விதழின் பங்கு எத்தகையது என்பதனையும் ஆசிரியர் முதற்கண்விளக்கி விடுகிறார். "தமிழ் வகையில் பஞ்சாங்கச் செய்யுட்கள், புராணம், இதிகாசம், பிற்காலத்துச் சான்றோர் நூல்கள் முதலியவற்றிலுள்ள அரும்பொருட்டிறங்களைப் புத்தம் புதிய முறையில் ஆராய்ந்து செந்தமிழ்ச் செல்வி கூறும், தமிழ் வரலாறு, தமிழ்ப் புலவர் வரலாறு, தமிழ் மன்னர் வரலாறு முதலியனவும் அவ்வப்போது எடுத்துரைக்கும். அன்றியும் இதன் கண் தமிழ் நன்மக்களுக்குப் பெரும் பயன்தரும் பொருள்கள் பிறமொழிகளினின்று மொழி பெயர்த்து வெளியிடப்பெறும்.

## இருவகைப் பணி

தமிழ் வளர்ச்சிப் பணி இருவகைப்படும். மொழி பயின்று இன்புறுதல் ஒருவகை. இன்புறுவோர் தொகையைப் பெருக்குதல் மற்றொரு வகை. செந்தமிழ்ச் செல்வி இவ்விரு வகையிலும் பணி செய்து வருகின்றது. இப் பணியால் கட்டுரை இலக்கியம் வளர்ந்துள்ளது.

இலக்கியத்தை ஒருவர் படித்துத் துய்ப்பதைவிடப் பல்லோரும் படித்துத் துய்க்க வேண்டும் என்ற பேரறத்தைச் செய்து வருகின்றது. சிலம்பு 16இல் இடம் பெறும் கற்பு நிலை என்ற கட்டுரை இலக்கண இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள செய்திகளின் தொகுப்பாக மட்டுமின்றி ஆய்வுக் கருத்தும் கொண்டுள்ளது. "ஆதலின் கற்பு என்பது உயிர்ப் பண்புகளின் ஆழ்ந்த தோய்வு நிலையாகிய, ஒருயிர்க்கு ஒருயிரென்னும் வரை மாட்சியின் இயற்கை விளக்கத்தில் நிழலாடுகின்ற தெய்வப் பண்பாகுமென்றும், அது மக்கட் பண்புகளோடு ஒன்றாவதன்றாய் அதனின் மேம்பட்டு மணம் கமழ்வதாகுமென்றும் அறிந்து கொள்ளலாம்" (ப.512) அகநானூறு, குறுந்தொகை, சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்கள் வழி இக்கருத்து விளக்கப்படுகிறது.

"நமது நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அடைந்த நாகரீகக் கருத்துக்களை அவர்களுக்குப் பின் வந்துள்ள பல்வேறு வகுப்பு மக்களும் அறிந்து பயன் அடைதல் வேண்டப் படுவதொன்றாகும். எடுத்துக்காட்டாகக் கந்தழி, இயவுள், கடவுள், நடு, திரு என்னும் சொற்களில் எத்துணை உயரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன. இத்தகைய சொற்களை நாம் வழங்காது மறந்து விடுவோமானால் அக்கருத்துக்கள் நமக்குத் தெரியாமல் போதலுமன்றி, நமது முன்னோர்கள் தொடர்பும் விட்டுப் போகும். ஆதலின் தமிழ் மக்களும் பிற மக்களும் பயன் அடைய வேண்டித் தமிழ்க் கட்டுரைகளில் தொன்மையான தமிழ்ச் சொற்கள் வழங்கித் தமிழாளர்கள் கட்டுரை எழுத வேண்டியது இன்றியமையாததாகும்" (சிலம்பு 5, பரல் 12) என்று மா.வே. நெல்லையப்ப பிள்ளை செந்தமிழ்ச் செல்வியின் கட்டுரைகள் அமைய வேண்டிய நடை குறித்து விளக்கியுள்ளதற்கு ஏற்பவே கட்டுரைகள் எழுதப்பட்டு வருகின்றன.

ஆராய்ச்சியாளர்கள் தமிழிசையையும் தமிழ்நாட்டில் வழங்கும் வேற்றுமொழி இசையையும் பற்றி ஆய்வு செய்ய வேண்டும் என்று தூண்டும் வகையில் அமைந்தது ஒரு தலையங்கக் கட்டுரை. (சிலம்பு 53 : ப.193 - 202) பிறப்பு முதல் இறப்பு வரைப் பாட்டாகவே அமைந்த வாழ்வியல் தமிழர் தம் வாழ்வியலாகும்.

ஆராய்ச்சிக்கு உதவும் அரிய நூல்கள் மறைமலையடிகள் நூலகத்தில் உள்ளன என்று வந்த ஓர் அறிமுகக் கட்டுரை (சிலம்பு 53 : பக். 90 - 91) நூலகங்களின் பட்டியலையும் ஆராய்ச்சிக் கருவூலங்கள் கிடைக்குமிடத்தையும் சுட்டுகின்றது.

"வெள்ளி, பொன், மணி ஆகிய மூன்று விலை மதிப்புக்கேற்ற படி 25, 50, 60 ஆண்டு நிறைவு விழாக்கட்கு முறையே அமைக்கப்

பெற்றிருக்கின்றன" (சிலம்பு 53 : ப.134) என்று கூறும் வெள்ளி, பொன் முதலிய விழாக்கள் அமைந்த முறை என்ற தலைப்பில் அமைந்த கட்டுரை ஆய்வுக் கட்டுரையாகும்.

ஆராய்ச்சி வகைகளும் (Varieties) நிலைகளும் (Standards) என்ற தலைப்பில் பேராசிரியத் தம்பதிகள் ந.சஞ்சீவி கிருஷ்ணா சஞ்சீவி ஆகியோர் ஆய்வின் ஐவகைப் பகுப்பை விளக்கியுள்ளனர். (சிலம்பு 53 : பக்.386 - 392) அரசியல், பொருளியல், சமூகவியல், அறிவியல், கலையியல் என்று முறைப்படுத்தி விளக்கியுள்ளனர். ஆராய்ச்சிக்குரிய பொது அடிப்படைகளாக இடைநிலை (horizontal) யையும், செங்குத்து நிலை (Vertical) யையும் குறிப்பிடுகின்றனர். "இலக்கிய ஆய்வியலிலும் ஒரு குறிப்பிட்ட காலத்துப் பொருள் பற்றிய ஆழ்வு ஆய்வையும் பல காலத்தும் ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய அகல ஆய்வையும் மேற்கண்ட வாய்பாட்டில் பொருத்திக் கொள்ளலாம். ஆழ்வு, அகலம் என்னும் போது யாதாயினும் ஒன்று தலைமை என்பதே பொருள்" (சிலம்பு 53 : பக். 387 - 388) ஒப்பாய்வு குறித்து விள்குகின்றனர். ஆராய்ச்சி என்பது ஒரு நாணயத்தின் ஒரு பக்கம் வகை தொகையாகவும் மற்றொரு பக்கம் விளக்கமாகவும் அமையும் என்ற கருத்தை நிலைநாட்டியுள்ளனர். ஆசிரியர்க்கு என்று வாசகர் தாம் படித்து மகிழ்ந்து செய்தியையும் தம் ஆலோசனைகளையும் தெரிவிப்பதுண்டு. அவ்வகையில் பல கடிதங்கள் செந்தமிழ்ச் செல்வியில் இடம் பெற்றுள. எனினும் தமிழ்ப்பணி குறித்த ஒருகடிதத்தை இங்கு மேற்கோளாகக் காட்டலாம். (சிலம்பு 65, ப.191)

> "செந்தமிழ்ச் செல்வி என்னும் செந்தமிழ் திங்களிதழில் கடந்த 21 திங்களாக வெளிவந்த "குறள்கூறும் இறைநெறி" என்னும் தீந்தமிழ்க் கட்டுரை கருத்தாழமிக்க, அறிவுபூர்வமாக இனிமையானதாக அமைந்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. இக்கட்டுரையினைப் படைத்தளித்த பேராசிரியர் மா.சண்முக சுப்பிரமணியம் அவர்களுக்கும் தங்களுக்கும் உளம் நிறைந்த வாழ்த்துக்கள்! பாராட்டுக்கள்!! நன்றிகள்!!
>
> வாழ்க! வளர்க தமிழ்ப்பணி
>
> மிக்க அன்புடன்
> ஜி. சுப்பையன்

கட்டுரையின் கருத்தாழம், ஆசிரியர், வெளியீட்டாளர் தமிழ்ப்பணி யாவும் மதிப்பிடப்படுவதைக் காண முடிகிறது.

ஆண்டுச் சந்தா, ஆயுள் சந்தா செலுத்தியவர்க்கு மட்டுமே அனுப்பப்படுகிற செந்தமிழ் ஏடு செந்தமிழ்ச் செல்வி ஆய்வுக் கட்டுரைகள் ஆய்வுச் சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன.

ஆசிரியர் குழுவினர் அடிக்கடி மாற்றப்பட்டுள்ளனர். பக்க அளவுகளும் முகப்பு அட்டையும் மாற்றம் பெற்றுள்ளன.

தொடக்க முதல் இன்று வரை பக்க எண தமிழெண்ணால் அமைந்திருப்பது சிறப்பேயாம்.

இதழ் என்ற அடிப்படையில் திங்கள் ஏட்டிற்குரிய சிறப்புக் கூறுகள் அமைந்துள்ளன. இதழ் நோக்கம் இன்று வரை போற்றப்பட்டு வருகிறது.

செய்திகளும் மதிப்புரைகளும் என்ற பகுதி ஒரு சில இதழ்களில் காணப்படவில்லை. தலையங்கம் இடம் பெறுகிறது. தனிக்கட்டுரை, தொடர்க்கட்டுரை இரண்டும் அனைத்து இதழ்களிலும் உள்ளன. ஒரே மாதிரியான தலைப்புகளில் வெவ்வேறு அறிஞர்கள் கட்டுரைகள் தந்திருப்பினும் உள்ளடக்கச் செய்திகள் வேறுபடுகின்றன.

நிலைபேறாந்தன்மையில் வரலாறு படைத்த இதழாகத் திகழ்கிறது.

இன்றைய இதழ்கள் வளர்ந்து வரும் திறனாய்வுத் துறைக்குச் சிறப்பிடம் தருகின்றன.

மூத்த தலைமுறையினர் விட்டுச் சென்ற பணியை இளைய தலைமுறையினர் செவ்வனே தொடர்ந்து நடத்துவதும் இதன் சிறப்பேயாம்.

# சங்க இலக்கியப் பணி

சங்க இலக்கியங்களின் பகுப்பான பத்துப் பாட்டுள் முதலாவதாக அமைந்திருப்பது திருமுருகாற்றுப்படை. முருகனின் அறுபடை வீடுகளின் பெருமை இதன்கண் உள்ளது. இதனை ஆற்றுப்படையும் அறுபடைவீடும் எனுந் தலைப்பில் கட்டுரையாக்கியுள்ளார் கழகப் புலவர் இறைக்குருவனார். (சிலம்பு 53 : 579 - 584) பாடாண்டிணைத் துறைகளில் ஒன்று ஆற்றுப்படை. திருமுருகாற்றுப்படை தொல்காப்பிய இலக்கணத்திற்கும் அதனை ஒட்டி எழுந்த இலக்கியங்களுக்கும் ஒரு வகையில் வேறுபாடுடையதாய் விளங்குகிறது. (சிலம்பு 53. ப.579) ஏனைய ஆற்றுப் படைகள் ஆற்றுப்படுத்தப்படுவோர் பெயர் தாங்கி உள்ளன. ஏனைய ஆற்றுப்படைகட்டுத் துறைப்பகுப்பு உண்டு. திருமுருகாற்றுப் படைக்குச் சிறப்புப் பெயர் புலவராற்றுப் படையெனினும் அதற்குத் துறைப்பகுப்புக் காணப்படவில்லை. வழிபாட்டு நூலாக இருந்ததால் பன்னிரு திருமுறையுள் சேர்க்கப்பட்டது. மக்களிடையே பரவலாக இருந்த இலக்கியமாகும். அறுபடை வீடு எனுஞ் சொல் வழக்கு திருமுருகாற்றுப்படையில் இல்லை. ஆறு திருப்பதி என்று குமரகுருபரர் கூறியது அறுபடை வீடுகளைக் குறிக்காது. முருகன் சேனாதிபதி யாதலின் அவன் உறையுமிடங்கள் யாவும் படை வீடுகளே என்று நாவலர் ந.மு. வேங்கடசாமி கூறும் கூற்றினையும் கட்டுரையாசிரியர் எடுத்துக் காட்டுகிறார். (சிலம்பு 53. ப.583) கி. வா. சகநாதன் அறுபடை வீடு என்ற வழக்கிற்கு அடிப்படை திருமுருகாற்றுப்படை என்கிறார். இதனை ஏதுக்கள் காட்டி மறுக்கிறார்.

சங்க இலக்கியச் சான்றுகள் வழித் திருச்செந்தூர், கொற்கை ஆகிய ஊர்களின் சிறப்பைக் கூறும் கட்டுரை (சிலம்பு 52. ப.133) திருமணி விளக்கின் அலைவாய். இக்கட்டுரை ஆசிரியர் கோ.வே. பெருமாள், பொருநை நாட்டினை இலக்கியம் வழிப் புலப்படுத்த மூன்று கட்டுரைகள் எழுதியுள்ளார். முருகன் தீம்புனல் அலைவாய் என்ற கட்டுரையில் (சிலம்பு 52 : ப.532) திருச்செந்தூர் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஊர் என்று நிறுவியுள்ளார்.

சங்கத்துச் சான்றோர் நிலையான கொள்கை உடையவர்கள். சங்க இலக்கியம் குறிக்கோள் மாந்தர்களையே காட்டுகிறது. அவ்விலக்கியம் படிப்போர் இலக்கியக் கருத்துக்களை வாழ்வில் பின்பற்றுவது

இன்றியமையாதது எனுங் கருத்தை வலியுறுத்திச் சங்க நூல் புறநானூறு வழிக் கட்டுரையாசிரியர் விளக்குகிறார். 'சான்றோர் நோக்கும் போக்கும்' என்ற தலைப்பில் (சிலம்பு 51) எழுதிய இக்கட்டுரையில் புறநானூற்றுப் பாடல்கள் பல விளக்கம் பெறுகின்றன. புறநானூற்றுச் செய்திகளைப் படிப்பவர்க்கு எளிமைப் படுத்தி வழங்கும் முறையில் இக்கட்டுரை அமைந்துள்ளது. சங்க நூற் புலவர்கள் வறுமையில் செம்மை கண்டவர்கள். ஆவூர் மூலங்கிழாரின் செம்மாப்புடைய சிந்தையை இக்கட்டுரையில் காணலாம். புலவர் மதுரைக் குமரனாரின் பொறுமையில் அறம் சிறந்த நன்னெஞ்சத்தைக் காண முடிகிறது. பெருந்தலைச் சாத்தனார், அவ்வையார், பெருஞ்சித்திரனார், பெருங் குன்றூர்க் கிழார் பாடிய சில பாடல்களின் விளக்கங்கள் படிப்பவர் மனத்தில் பதிவன.

முதல் இதழில் தமிழின் தொன்மையான இலக்கியங்கள் பற்றிய கட்டுரை இடம் பெற்றிருத்தல் போல் 51 ஆம் சிலம்பிலும் தமிழ் நூற் சிறப்பு விளக்கம் பெறுகிறது. இது கூறியது கூறலாகாமல் இருக்க வேண்டும் என்பதற்கு ஏற்பச் சற்று விரிவான விளக்கக் கட்டுரையாக அமைந்துள்ளது. தமிழ் நூல்களை வரலாற்றடிப்படையில் விளக்குவதால் படிப்பவர் நன்கு விளங்கிக் கொள்ள முடிகிறது.

நெடுநல்வாடை திணையாராய்ச்சி என்ற தொடர்க்கட்டுரை அறிஞர் பெருமக்களின் மறுப்புரையும் விடையுமாக அமைந்ததாகும். முடியுடை மூவேந்தருள் பாண்டியருக்கு மட்டுமே வேப்பமாலை உரியது. என்கிறார் இக்கட்டுரையாசிரியர் செ. வேங்கடராமச் செட்டியார். வேப்ப மாலையைப் பிறரும் சூடலாம் என்றும், அகமும் புறமும் கலந்த புதுவகையான திணை என்றும் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை கூறுவதைத் தக்க ஏதுக்களைக் காட்டி மறுக்கிறார் (சிலம்பு 32, ப.153)

கி.மு. முதலிரு நூற்றாண்டுகளில் தென்கிழக்கு ஆசியாவிலிருந்து கமுகுமரம் நம் நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டது. வெற்றிலையும் அவ்வாறே. வெற்றிலை குறித்து மதுரைக் காஞ்சி,

> "நகை செய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்
> நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றினர்" (400 - 401)

என வந்துள்ளது. பெரும்பாணாற்றுப்படை, நெடுநல்வாடை, அகநானூறு ஆகிய சங்க இலக்கியங்களில் வெற்றிலை, பாக்கு பற்றிய குறிப்பு காணப் படுகிறது. வெற்றிலை, பாக்குப் போடும் பழக்கம் சங்க காலத்தில் தோன்றியிருக்கலாம். கமுகுமர வருணனை அகநானூற்றில் காணப்படுவதால் கி.மு.முதலிரு நூற்றாண்டுகளில் அத்தொகை

நூற்பாடல்கள் பாடப்பட்டிருக்க வேண்டும் என்று கால நிர்ணயம் செய்கிறார் பி.எல்.சாமி (சிலம்பு 63, பக்.460 - 461) ஒரு பயிரின ஆய்வின் வழி இலக்கியத்திற்குக் கால உறுதி கிடைக்கிறது.

உ.வே. சாமிநாதையரும் பிற உரையாசிரியர்களும் சங்க நூல்களில் வரும் பதவு என்ற சொல்லுக்கு அறுகம்புல் என்று பொருள் கூறியிருப்பதைப் பயிரினம் பற்றி நன்கு அறிந்த அறிஞர் பி.எல். சாமி மறுத்துரைத்து அறுகை என்பதுதான் அறுகம்புல் என்று நிறுவியுள்ளார். (சிலம்பு 65, பக்.56-57) சங்க நூல்களில் அறுகும் பதவும் என்ற கட்டுரையில் அகநானூறு (136), குறுந்தொகை (256), பட்டினப்பாலை (256) ஆகியவற்றை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். தமிழறிவுடன் பிற துறை அறிவும் பெற்றிருக்க வேண்டும் என்தற்குத் தக்க சான்று இதுவாகும்.

குறிஞ்சிப் பூவும் தேனும் தரும் நுண்ணிய உள்ளுணர்வுகளைப் பழந்தமிழ் இலக்கியத்தில்தான் காண முடியும். முதல், கருப்பொருள்கள் இயற்கையும் செயற்கையுமான சூழலைக் குறிக்கின்றன. அச்சூழலில் ஊடாடும்போது மாறும் உளப்பாங்கு குறித்ததே உரிப்பொருளாகும் என்று பழந்தமிழ் அகஇலக்கியப் பகுதிகளை மானிடவியல் நோக்கில் குறிஞ்சித்திணை என்ற தலைப்பில் பி.எல். சாமி ஆய்வது மேலாய்வுக்குப் பயன்படும். (சிலம்பு 32, ப.555)

'அறம் எனப்படுவது விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலுமாம்' என்று அறத்திற்கு இலக்கணம் வகுத்து, அகப்பாக்களிலும், புறத்தோடு தொடர்புடைய அறத்தினை எடுத்துக்கூறும் பகுதிகள் உள என்று த.சா. மாணிக்கம் அகப்பொருள் இலக்கியங்களில் அறம்-அகநானூறு என்ற தலைப்பில் அகநானூற்றைத் திறனாய்வு செய்கிறார். (சிலம்பு 43, ப.25-58) அகநானூற்றில் காணப்படும் அறம் பற்றிய பாடல் அடிகளைத் தொகுத்து விளக்கம் தருகிறார். பொருள் அடிப்படையில் சமூகம் வறுமையின்றி வாழவேண்டும். முயற்சி, பேருழைப்பு போன்றவை எக்காலத்தும் போற்றப்படும் அறப்பண்புகளாம் என்பன போன்ற கருத்துகளை விளக்குகிறார். (சிலம்பு 43, பக்.81-85) இது ஒரு தொடர் கட்டுரையாகும்.

பண்பாட்டின் அடிப்படையில் வளரும் காதல் வாழ்க்கையே மாதர் மகிழ்ச்சிக்குரிய வாழ்க்கை என்பதைப் பாலைத் திணையும் பண்பின் உயர்வும் என்ற தலைப்பில் கலித்தொகை வழிக் குமாரசுவாமி ஆச்சாரி விளக்குகிறார். (சிலம்பு 30, பக்.177-181)

சங்க நூல்கள் தரும் செய்திகள் என்ற தலைப்பில் பி.எல்.சாமி எழுதிய கட்டுரையில் அரிய செய்திகளைத் தொகுத்துத் தருகிறார். "நம்ப முடியாத சில உயிர்கள் ஆஸ்திரிலேயாவில் உள. அதுபோல் சில உயிர்கள் தமிழ்நாட்டிலும் இருந்தன" (சிலம்பு 27, ப.146) என்பதற்குச் சில சான்றுகளைச் சங்க நூல்களிலிருந்து எடுத்துக் காட்டுகிறார்.

சங்கப் புலவர் கபிலர் அந்தண இனத்தைச் சேர்ந்தவர் அல்லர் என்பதற்கு விளக்கம் தருகிறார். முனிவன் அகத்தியன் என்று கூறுவது போல அந்தணன் கபிலன் அமைந்துள்ளது. "உண்மையில் சங்க நாளில், சாதி வேற்றுமையில்லா நாளில், அதுவும் புலனழுக்கற்ற, செறுத்த செய்யுள் செய் நாவின் வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன் இவ்வாறு சாதியால் தம்மையுயர்த்திக் கூறியிருப்பாராவென்பதா ரயத்தக்கது" (சிலம்பு 25, ப.129) என்று சி. சுப்பிரமணியன் கூறுகிறார்.

புறநானூற்றுப் பாடல் (150) விளக்கமே பெருநள்ளியின் பெருந் தகைமை என்னும் கட்டுரை. (சிலம்பு 18)

சங்க காலத்து அன்னதானம் ஒரு சொற்பொழிவுக் கட்டுரையாகும். ஆசிரியர் மா. இராசமாணிக்கனார் புறநானூறு, மணிமேகலை வழி அன்னதான நிலையை எடுத்தியம்புகிறார்.

முல்லைப் பாட்டு பற்றிய கட்டுரையில் பாட்டு என்பது பல்வகைப் பொருளைச் சிலவகை எழுத்திற் காட்டிக், கற்பவர் மனத்தில் ஒரு கிளர்ச்சியையுண்டாக்குவது என விளக்குகிறார், மேரி மாசிலாமணி அம்மையார். பாட்டின் உண்மைப் பொருளை உணரப்பாடலைப் பன்முறைப் படிக்க வேண்டுமேயன்றி உரையைப் படித்து உணரக் கூடாது என்கிறார் கட்டுரை ஆசிரியர். "ஆகையால் இப்பாட்டுப் போன்ற சங்க நூற்களைப் படித்து இன்புற விரும்புவோர் உரையை முதலிற் கருதாது, பாட்டை இரண்டு மூன்று முறை, தட்டுத் தடங்கலில்லாமல் ஆற்றொழுக்காய் வாசித்தும் பின்னர் ஆராய்ச்சி நிகழ்த்த வேண்டும்"(18,272)

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஊதியத்திலிருந்து நடை பெற்ற குறுந்தொகை மாநாட்டுச் செய்திகளைக் கட்டுரையாகவே செந்தமிழ்ச் செல்வி வெளியிட்டுள்ளது.

சோகரணம் என்ற தலைப்பில் ந.மு. வேங்கடசாமி நாட்டார் எழுதிய கட்டுரை வடமொழித் தலைப்புடையது. எனினும் தமிழில் அவலச் சுவை குறித்த விளக்கமே. புறநானூற்றுப் பாடல்களை எடுத்துக்

காட்டி அவலச் சுவையை விளக்குவதுடன் சீவகசிந்தாமணியினின்றும் காட்டுகள் தந்துள்ளார். சங்க இலக்கியத்தையும் காப்பிய இலக்கியத்தையும் இணைத்து எழுதியுள்ளார். "சோகம் என்பது அகத்தில் எழும் ஓர் துன்ப உணர்ச்சியே யாயினும் நல்லிசைப் புலவர்கள் அதனை மேலும் மேலும் விரும்பி நுகரும் சுவையாகச் செய்து விடுகின்றனர்" (சிலம்பு 17 பக்கம் 442) என்று அவலத்தையும் சுவையாக்கும் கலைத்திறனைச் சுட்டுகிறார்.

சங்க நூல்களில் பல ஊர்களைப் பற்றிய செய்திகள் வந்துள்ளன. அவற்றுள் அகநானூறு 70ஆம் பாடலில் 'தொன்முதுகோடி' என்று வரும் ஊர் கோடிக்கரைதான் எனக் கட்டுரையாசிரியர் பி.எல். சாமி கருதுகிறார். (சிலம்பு 50, பக்கம் 32) கோடிக்கரையில் ஒலிக்கும் பறவைகள் மிகுதியாக இருந்தன. இலங்கைப் பயணத்தின் போது இராமன் அவற்றின் ஒலியை அடக்கினான் என்று அகநானூறு கூறுகிறது. இராமன் கோடிக்கரையில் மந்திராலோசனை செய்ததாகக் கூறுவர். தொன்முது கோடியைத் திருவணைக்கரை என்றும் அழைப்பர். வால்மீகி இராமாயணத்தை வரலாற்று நோக்கில் ஆய்ந்த சங்காலியா என்ற வரலாற்றுப் பேராசிரியர் இராமாயண நிகழ்ச்சிகள் தென்னாட்டில் நிகழவில்லை எனக் கூறுகிறார். இக்கருத்துக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் அகநானூற்றுப் பாடல் கருத்து அமைந்துள்ளது. இது கி.பி. முதல் நூற்றாண்டிலேயே இராமனை இலங்கைத் தீவுடன் தொடர்பு படுத்தும் கதை தென்னாட்டில் பரவியிருந்தது என்ற கருத்தை உள்ளடக்கியுள்ளது.

சங்க இலக்கியத்தில் ஆடை, அணிகலன்கள் என்ற தலைப்பில் பி.எல். சாமி எழுதிய கட்டுரை சங்க நூற் சான்றுகளை மேலை நாட்டு வரலாற்றுச் சான்றுகளுடனும் வடநூற் சான்றுகளுடனும் ஒப்பிட்டு, ஒப்பியல் நோக்கில் எழுதப்பட்டதாகும் (சிலம்பு 51, பக்கம் 597-602).

ஆறாம் பத்தின் தலைவன் ஓர் ஆய்வு என்ற கட்டுரை ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயராய்வுக் கட்டுரையாக அமைகின்றது. (சிலம்பு 49, பக்கம் 305-313) பகைவரிடமிருந்து தம் ஆடுகளை மீட்டவன். பகைவருடைய ஆடுகளை மீட்டவன். வருடையாட்டைப் பிடித்தவன் என மூன்று வகையாகக் காரணங்களை பொ. முனியப்பன் எழுதிய கட்டுரை திசம்பர் 1974இல் வெளி வந்ததைச் சுட்டிக் காட்டி, உ.வே. சா.வின் குறிப்புரைகளைச் சான்றுகளாக்கி இம்மன்னனைக் குறித்து விளக்குகிறார் கட்டுரையாசிரியர் சி.மெய்கண்டான். ஆடு கோட்பாடு என்பது வெற்றிச் சிறப்பைக் கொண்டவன் எனக் கொள்வதே சிறப்பு என்கிறார் (பக்கம் 310) போரில்

வெற்றி பெற்ற பின் துணங்கையாடும் கொள்கையாக மேற்கொண்ட சேரலாதன் என்று பெயர் விளக்கம் தருகிறார் கட்டுரையாசிரியர். பிற மன்னர்களும் வெற்றிக் களிப்பின் போர் முகத்து ஆடினும், இவன்றன் போர் முகத்து ஆடுஞ் சிறப்பினை உளத்திற் கொண்டு ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் எனப் பெயரிட்டனர் என்க. இது பொருந்து மேற் கொள்க. (இங்கு ஆடு என்பது ஆடுதல் என்ற பொருளில் வந்தது) (பக்.313) என்று கட்டுரையாசிரியர் மேலும் ஆய்வதற்கு வழி வகுக்கிறார்.

துகில் என்பது மென்மையும் மேன்மையுமான பஞ்சாலான ஆடை தமிழகத்தில் நெய்யப்பட்ட இவ்வாடை இரவு நேர ஆடையாக அணியப்பட்டது என்பதற்குப் பட்டினப்பாலையில் (அடி 106-107) சான்று உண்டு. அகநானூற்றிலும் (387) துகிலாடை பற்றிய செய்தி உண்டு. ஆவியன்ன பூந்துகில் என்பது வெண் துகிலாகும் பரிபாடலில் (79) வெண் துகிலின் சிறப்புப் பேசப் பெறுகின்றது. துகிலில் வேறு பல நிறங்கள் கொண்ட நிலையும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுகிறது. (சிலம்பு 52, பக்.30-31) துகிலாடையை ஆடவரும் மகளிரும் அணிந்தனர். மகளிர் இடுப்பில் கட்டிய ஆடை துகிலாகும். சிறு பாணாற்றுப்படையில் (236) மூங்கிலின் உள்ளே உள்ள மென்தோல் போன்ற ஆடை குறிக்கப் படுகிறது. காடிகம் என்பது நீலநிற ஆடை, ஆடை வகைகளையும் அணியும் முறைகளையும் விளக்கியுள்ளார் பி.எல். சாமி.

மக்கட் பெயராய்வுத் தொடர் கட்டுரை சிலம்பு 53இல் வந்துள்ளது. சங்க நூல்களில் வந்துள்ள மக்கட் பெயர்கள் அமைந்த பாங்கினை விளக்கு முகமாக இவ்ஆய்வுக் கட்டுரை அமைந்துள்ளது. பன்மொழிப் புலவர் இரா. மதிவாணன் எழுதிய இக்கட்டுரையில், அறுகை அன்னி, அன்னி ஞிமிலி, ஆட்டனத்தி ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பக்.25-32) ஆதன், ஆதனுங்கன், ஆதிமந்தி (பக்.125-128) ஆகிய மக்கட் பெயர்கள் ஆராயப்படுகின்றன. பெயர்கள் இடம் பெறும் சங்க இலக்கியங்களைச் சுட்டி, மேற்கோள் தருகிறார். பிற மொழிகளிலும் அகராதிகளிலும் அப்பெயர்களுக்குரிய விளக்கங்கள் தரப்படுகின்றன. திரிந்து வழங்கும் முறைகள் விளக்கப்பட்டுத் தூய தமிழ்ப் பெயர்களே இவை என நிறுவப்பட்டுள்ள நிலையை இத்தொடர் கட்டுரையில் காண முடிகின்றது. பெயராய்வு குறித்து எம்.பில், பிஎச்.டி. செய்வார்க்குப் பெரிதும் பயன் தரும் கட்டுரை. இத்தகைய ஆய்வாளர்க்கு நெறி முறைகளை வகுத்துத் தரும் பாங்கில் இக்கட்டுரை அமைகிறது. பழந்தமிழில் மக்கட் பெயர் என்ற தலைப்பில் உள்ள இக்கட்டுரை இன்றைய கள ஆய்வுக்கு வழி வகுக்கிறது.

பாலைக்கலிப்பாட்டின் விளக்கமாக அமையும் கட்டுரை சொ.சிங்காரவேலன் எழுதிய கவிதையில் அறிவுறுத்தும் திறன் என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையாகும். தமிழ்க் கவிஞன் கவிதை வழிக் கருத்துகளை அறிவுறுத்தி மக்களை உயர்வித்துள்ளான் என்பதற்கு எடுத்துக் காட்டாகப் பாலைக் கலிப் பாடல் விளக்கம் பெறுகிறது. (சிலம்பு 53, பக். 563 - 566) வாழ்வின் குறிக்கோளைச் சுட்டி நெறிப் படுத்தும் உயர்ந்த நோக்கம் கொண்ட கவிதை கலித்தொகைப் பாடல். "தமிழ்க் கவிதை அறிவுறுத்தும் இயல்புடையது அகப் பொருளை உரைக்குங்காலும் சமுதாய நல்வாழ்வைத் தமிழ்க் கவிஞன் மறந்தறியான்; சுவையற்ற பாலை வழியேயாயினும் கூட இனிய கவிஞனது நெஞ்சப் பாங்கின் உயர் பண்பாடு, அதனை அழகு தழுவிய ஒன்றாக ஆக்கிடும் திறன் படைத்தது" (சிலம்பு 53, பக். 565-566) கட்டுரையிறுதியில் 'வறியவன் இளமை போல் வாடிய சினையவாய்' எனத் தொடங்கும் பாலைக் கலியின் முழு வடிவம் தரப்பட்டு, நச்சினார்க்கினியரின் சிறு விளக்கமும் இடம் பெறுகிறது. கலித்தொகை நூலைப் படிக்க இயலாதவர் செல்வி இதழைப் படித்தாலே போதும் என்று கூறுமளவிற்கு இதன் இலக்கியப் பணி சிறக்கிறது.

அகநானூற்றில் 'பவத்திரி' என்ற ஆய்வுக் கட்டுரை 53ஆம் சிலம்பில் தொடர் கட்டுரையாக அமைகிறது. இதனை எழுதிய பி.எல்.சாமி "சங்க காலத்தில் ஆந்திர நாட்டில் இருந்த பவத்திரியைத் தொண்டைமான் பொலம்பூண் திரையன் ஆண்டிருந்தான் என்று கருத இடமுண்டு" (பக்கம் 569) என்று விளக்கும் போது கல்வெட்டுச் செய்தியையும் துணைக் கொள்கிறார். "சங்க காலத்தில் புல்லி என்ற மன்னன் வேங்கடத்தை ஆண்டான். அவன் கள்வர் மரபினன் என்பது சங்க நூல்களிலிருந்து தெரிகின்றது." (ப.566) புல்லியே புலியாகி புலியை மாய்த்ததால் புலிமாய் எனப் பெயர் பெற்றதாகக் கூறுகிறார். வேளிர் வரலாற்று ஆய்வாளர் மு.இராகவையங்காரும், பின்னர் இதனை ஆராய்ந்த மகாதேவனும், ஒய்சள மன்னர் வேளிர் வழியினர் என்று முடிவு கூறியதை ஏற்கும்படி இக்கட்டுரையாசிரியரின் சங்க இலக்கிய ஆய்வு அமைகிறது.

முடியுடை மூவேந்தருள் சேரனைப் பற்றிய ஆய்வாக ஆந்திரர் சேர மரபினர் என்ற ஆய்வுத் தொடர் கட்டுரை உள்ளது (சிலம்பு 53, பக் 401-403) சேர, சோழ, பாண்டியர் என்ற வழக்கில் சேரருக்கு முதலிடம் தரக் காரணம் யாது என்ற வினாவிற்கு விடை அளிப்பதே இவ்வாய்வுக் கட்டுரை. 'போந்தை வேம்பே ஆர்' எனத் தொல்காப்பியத்திலும் சேரர் அணியும் பூவிற்கே முதலிடம் தரப்பட்டுள்ளது. இடப்பரப்பிலும்

மக்கள் தொகையிலும் சேரரே முதன்மை பெற்றவராய் இருத்தல் வேண்டும் என்பதைக் கருதுகோளாகக் கொண்டு வரையப்பட்ட இக்கட்டுரை வரலாற்றைப் புதுப்பிக்கிறது. மொழி, இடப் பெயர், மக்கட் பெயர், வரலாறு, பழக்க வழக்கம் போன்ற சான்றுகள் வாயிலாக ஆந்திரர் சேர மரபினரே என்பதை நிலை நாட்டுகிறார். மக்கள் தொகையிலும் இடப் பரப்பிலும் விரிந்த ஆந்திரம் சேரர் பெருநாடாக இருந்தது என்கிறார் பழைய வரலாற்றை ஆராய்ந்தார்., பிரிந்த இனத்தார் ஒன்று கூடி வாழ இயலும் என்கிறார். "கப்பல் வணிகத்தில் சிறந்தவனே நாவாய்கள் - நாய்கள் எனப்படுவன ஆந்திரரில் பெரும்பாலும் நாய்க்கள் என்னும் குடிப் பெயருடையராய் இருக்கின்றனர்" என்ற கட்டுரை யாசிரியரின் கூற்று ஆந்திரரைத் தமிழனத்தார் எனக் குறிக்கின்றது. தொல்காப்பியத்தில் கல்வியும் சங்க இலக்கிய நூல்கள் பற்றிய ஆய்வுந்தான், இவ்வாய்வுக் கட்டுரையை எழுதத் தூண்டுகோலாயின.

குறுந்தொகை 324ஆம் பாட்டில் வரும் கவைமக என்ற தொடருக்கு ஒட்டிப் பிறந்த இரு குழந்தைகள் அறுவை சிகிச்சைக்குப் பின் தனித்தனிக் குழந்தைகளான நிலை என்று விளக்கம் தருகிறார் செ.வேங்கடராமச் செட்டியார் (சிலம்பு 53 : ப.436 - 439) குறுந்தொகைச் சொற்றொடர்களையே கட்டுரைத் தலைப்பாக்கியுள்ளார் 'கவைமக நஞ்சுண்டா அங்கு அஞ்சுவல்' என்ற தலைப்புச் சங்க நூற் பயிற்சியுடையார்க்கே விளங்கும். இதற்கு உ.வே.சா. உரையைக் கூறி அதன் பொருத்தமின்மைய விளக்கித் தம் கருத்தை விளக்குகிறார். மேலாய்வாளர்க்குப் பயன்படும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

கபிலர் வரைந்த அகநானூற்றுப் பாடலின் (284) விளக்கமே இயற்கை ஓவியம் காவற் கடமை எனுந் தலைப்பில் இரா.இளங்குமரன் எழுதிய கட்டுரையாகும். (சிலம்பு 53 : பக்.441 - 444) எளிய நடையில் யாவரும் படித்துணரும் நிலையில் இக்கட்டுரை நடை அமைந்துள்ளது. "காவல், தனி வாழ்வுக்கும் வேண்டும்; பொது வாழ்வுக்கும் வேண்டும். காவல் இல்லையானால் கட்டு அழியும்; கெட்டுத் தொலையும் காவல் இன்றியமையாதது; ஆதலால், தமிழர் கைகளில் காப்பு அணிந்தனர். விழாவுக்குக் காப்புக் கட்டினர், ஊருக்குக் காவல் தெய்வம் வைத்தனர்; காவற் கடவுளும் கண்டனர்" (சிலம்பு 53:ப.441)

சங்க இலக்கியங்கள் குறித்த தாளங்கள் எவை என்ற வினாவிற்கு விடை காணும் முகமாக ஞானசம்பந்தரும் தாள மரபும் என்ற இசை ஆய்வுக் கட்டுரை அமைந்துள்ளது. (சிலம்பு 53 : பக். 473-478)

ப.வைத்தியலிங்கம் பிள்ளை எழுதிய தாளமும் அனுபவமும் என்ற நூலில் கண்ட தாளம் என்ற சொல்லிற்குரிய விளக்கத்தை மறுத்து இக்கட்டுரை ஆசிரியர் வீ.ப.கா. சுந்தரம் புதிய விளக்கம் தருகிறார். ப.வைத்தியலிங்கம், தா.சிவன், வடசக்தி; சிவகத்திக் கூட்டுறவே தாளம் என்கிறார். தாளம் அடிப்பாகம் இசைக்கு அடிப்படையானது என்று பின்னர் கருதுகிறார். தாளத்திற்கு எண்ணிக்கை உண்டு, என்பதற்கு அகநானூறு (352 அடி 15) கொண்டு விளக்குகிறார். மரத்தைப் பிளந்து வைத்துக் கொண்டு தட்டுவது கிட்டித்தாளம். இதற்கு எல்லரி மறு பெயராகும். மலைபடு கடாம் (அடி 10) என்ற நூலில் இதற்குச் சான்று உண்டு என நிறுவுகிறார்.

புறநானூற்றில் கண்ட சில பழைய வழக்குகளும் வரலாறுகளும் என்ற ஆய்வுக் கட்டுரையில் ந.மு. வேங்கடசாமி நாட்டார் இறைவன் முன் மன்னன் குடை தாழ்ந்தே செல்லும் என்றும் மன்னவனின் வீரமுரசு மலரணை பொருந்திய கட்டிலில் இருக்கும் என்றும் புறநானூற்றுப் பாடல்கள் வழி எடுத்து விளக்கியுள்ளார்கள். சூலுற்ற மகளிர் மண்ணைத் தின்னும் வழக்கைப் புறநானூற்றுச் சான்று வழி விளக்குகிறார் (சிலம்பு 8, பக்.34-36)

புறநானூறும் பழந்தமிழ் நாடும் என்ற ஆய்வுக் கட்டுரையில் இளவழகனார் முத்தமிழ்ச் சங்கம் மூன்றின் மொத்தக் காலத்தைக் கணக்கிட்டுக் கூறுகிறார். கி.மு. நான்காம் நூற்றாண்டின் நடுவுதுவங்கி, கி.பி.இரண்டாம் நூற்றாண்டின் நடுவு காறும் நாலாயிரம் ஆண்டுக் காலம் தலை, இடை, கடைச் சங்கங்கள் நிறுவப் பெற்று நூலாய்வாளர்கள் நூல் தந்தனர் என்கிறார். கி.மு.இரண்டாம் நூற்றாண்டையடுத்து முன்னூறு ஆண்டுகள் புத்த காலமும் அதன் பின் முன்னூறு ஆண்டுகள் சமண காலமும், அதன் பின் அறுநூறு ஆண்டுகள் சைவ, வைணவக் காலம் பின் நானூறு ஆண்டுகள் பார்ப்பனக் காலம் இறுதியாக இருநூறு ஆண்டுகள் ஆங்கிலக் காலம் என்று இலக்கிய வரலாற்றுக் காலத்தைப் பகுத்துக் காட்டுகிறார். (சிலம்பு 8, பக்.24-25) முச்சங்க நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு எனவும் வரையறை செய்கிறார். புறநானூற்று ஆராய்ச்சிக்குள் புகுமுன் முச்சங்க வுண்மையைக் கூறிக் காலப் பகுப்பு செய்கிறார். முதல் நாலாயிரம் ஆண்டுகட்கும் இன்று ஒரு நூலாகக் கிடைப்பது தொல்காப்பியம் ஒன்றேயாம். பழந்தமிழ் நாட்டின் உண்மைகளைக் கண்டறியத் துணை நிற்பன சங்க இலக்கியங்களாகும். பழந்தமிழ் நாட்டுண்மையைப் பழந்தமிழ்நாட்டு பாண்டியர் வரலாற்றை எழுதப் புறநானூற்றுப் பாடல்கள் துணையாகும் தன்மையைக் கட்டுரை யாசிரியர்

விளக்கியுள்ளார். (சிலம்பு 8, ப. 32)

கலித்தொகையிலொரு கதை மகிழ்நன் எழுதிய தொடர் கட்டுரை. கலித்தொகைப் பாடல் கருத்துகளை எளிய உரைநடையில் தந்துள்ளார். பாடலைப் படித்து விளங்கிக் கொள்ள முடியாத வாசகர்க்கு இக்கட்டுரை பெரிதும் துணையாகும். செய்யுள் இலக்கியத்தை உரைநடை இலக்கியமாக்கி வழங்கும் பணியில் செந்தமிழ்ச் செல்வி சிறந்து விளங்குகின்றது. (சிலம்பு 17, பரல் 11, 12)

சிருங்கார ரஸம் என்ற வடமொழித் தலைப்பில் கட்டுரை எழுதியிருப்பவர் ந.மு. வேங்கடசாமி நாட்டார். இன்பச் சுவை என்று தமிழில் கூறப்படுவதே சிருங்கார ரஸமாகும். உவகை தோன்றுமிடங்கள் குறித்துத் தொல்காப்பியர் குறித்த நூற்பாவைக் காட்டாகத் தந்துள்ளார். 'யாயும் ஞாயும் யாராகியரோ' எனத் தொடங்கும் குறுந்தொகைச் செய்யுளும் அதன் விளக்கமும் கட்டுரையில் இடம் பெறுகின்றன. 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்று முடியும் கம்பராமாயணச் செய்யுளின் காட்சி வருணனையும் உவகைச் சுவைக் காட்டாக விளக்கப்படுகின்றது. சங்க இலக்கியமும் காப்பிய இலக்கியமும் உவகைச் சுவையாகத் தருவனவற்றை இணைத்துக் கட்டுரை வடித்துள்ளார். சுவை எனும் பொருள் பற்றிய கட்டுரையாதலின் தமிழ் இலக்கியங்களில் வேறுபட்ட கால இலக்கியங்களிலிருந்து சான்றுகள் அமைகின்றன. பாடலும் விளக்கவுரையும் உரைநடையில் எளிமையாக அமைவதால் தமிழ் இலக்கியம் பரப்பும் கொள்கை உறுதியாகின்றது.

பாரியின் பிரிவால் வாடியகபிலர் வடக்கிருந்து துறக்கம் புகுந்த செய்தியைப் புறநானூறு கூறும் திருக்கோவலூர் சாசனத்தாலும் இதனை அறியலாம். பட்டினி நோன்பிருந்து மரணம் அடையும் நிகழ்ச்சி வால்மீகி ராமாயணத்திலும் காணப்படுகிறது என்பதனைச் சான்று காட்டி ஒப்பாய்வு செய்கிறார் வடக்கிருத்தல் என்ற கட்டுரையில் கோவைகிழார் (சிலம்பு 17 பக் 120-127).

* * * *

# இலக்கியப் பணியில் திருக்குறள்

திருவள்ளுவரின் வரலாறு, திருக்குறள் உரையாசிரியர்களின் கருத்துக்கள், திருக்குறள் பயின்று வரும் இலக்கியங்கள், தனிக்குறள் விளக்கம், திருக்குறளும் சமயமும் போன்ற கருத்துக்களைப் பல கோணங்களில் அறிஞர்கள் ஆராய்ந்து எழுதிய கட்டுரைகள் 'செந்தமிழ்ச் செல்வி'யில் இடம் பெற்றுள்ளன.

கபிலர் அகவல் தரும் செய்தியை மறைமலை அடிகள் தருகின்றார். (14, பக்கம் 17-23) தாய் தந்தை ஆதி பகவன், நெய்தல் தொழிலினர், வாசுகியை மணந்தார். ஏலேலசிங்கன் என்னும் பெருஞ்செல்வர் ஆதரித்தார். அரசனுக்கு உட்படுகருமத்தலைவராகப் பணிபுரிந்த செய்தியை அ.சிதம்பரனார் கூறுகின்றார். (சிலம்பு 15, பக்.535-542) கபிலரகவல் தரும் செய்தி கட்டுக்கதை என்றும் இவர் குறித்துள்ளார். (சிலம்பு 13 பக்கம் 455-457)

வள்ளுவர் காலம் குறித்துப் பலவாறு மொழியப்படுகிறது. கி.மு. முதலாம் நூற்றாண்டு என்று கு. பரமசிவம் தம் கட்டுரையில் கூறுகிறார். (சிலம்பு 28, ப.452) கி.மு.12 முதல் கி.மு.5க்குள் நூல் இயற்றியிருக்கக் கூடும் என்று கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுகிறார். (சிலம்பு 6, பக் 579-582) கி.பி. முதலாம் நூற்றாண்டு என்கிறார் ந.மு. வேங்கடசாமி நாட்டார் (சிலம்பு 45, பக் 82-90). இவ்வறிஞர்கள் காலத்தை ஆராய்வதற்குத் தக்க ஏதுக்களைக் காட்டி நிறுவுகின்றனர். அவையே கட்டுரைகளாக விரிந்து படிப்பவரைச் சிந்திக்கச் செய்கின்றன.

பிறந்த இடம் மதுரையா! மயிலையா? என்ற ஆய்விலும் அறிஞர்கள் தம் கருத்தை எழுதியுள்ளனர். தி.க. கனகசுந்தரம் பிள்ளை என்பார் திருவள்ளுவர் சேர நாட்டைச் சேர்ந்தவர் என்று நிறுவுகிறார். (சிலம்பு 9, பக் 113) வள்ளுவச் சாதியில் பிறந்தவர் திருவள்ளுவர் என்கிறார் மறைமலையடிகளார். (சிலம்பு 14, பக் 60-61) இயற்பெயரே என்று நிறுவுகிறார் கனகசுந்தரம் பிள்ளை. (பரல் 9, பக். 132-133) பட்டப் பெயர் என்கிறார் சிதம்பரனார். (சிலம்பு 15, பக்.572).

குலம்பற்றிய ஆய்வில் வேளிர்குலம் என்று சிதம்பரனார் குறிப்பிடுகின்றார். (சிலம்பு 15, பக்.535-542) தொழிலில் நெய்தல் தொழில் செய்யவில்லை உழவுத் தொழில்தான் மேற்கொண்டார் என்று அ.சிதம்பரனார் நிறுவுகிறார் (சிலம்பு 15, பக்.572-581). இவ்வாறு பிறப்பு, குலம், தொழில் பற்றிய ஆய்வுகளை இவ்விதழ்வழிப் பல்வேறு அறிஞர்கள் நிகழ்த்தி, தாம் தாம் கண்ட மெய்ம்மைகளைச் சான்று காட்டி நிறுவியுள்ளனர்.

சங்க இலக்கியம், காப்பிய இலக்கியம், சமய இலக்கியம் ஆகியவைகளின் பயின்று வரும் திருக்குறள் கருத்து, தொடர்கள் குறித்து அறிஞர் பலர் கட்டுரைகள் எழுதியுள்ளனர். திருக்குறளுக்கு முற்பட்டது சங்க இலக்கியம். பிற்பட்டவை பிற இலக்கியங்கள். முன்னும் பின்னும் குறள் மணம் கமழ்வதை எடுத்துக் காட்டியுள்ள கட்டுரைகள் 'செந்தமிழ்ச் செல்வி' முழுவதும் விரவி இருப்பதைக் காணலாம்.

"நீர் இன்றி இவ்வுலகம் இல்லையோ அதுபோல் தலைவனின்றித் தலைவி இல்லை" (நற். பா.1) என்று மது.ச. விமலானந்தம் நற்றிணைப் பாடலுக்குப் பொருள் தரும்போது தொடர்ந்து குறள் விளக்கம் தருகிறார் (சிலம்பு 35, பக். 353-360).

"நீரின்றி அமையாது உலகெனில் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு" (குறள் 791) என்ற குறளை எடுத்துக் காட்டுகிறார் கட்டுரையாசிரியர்.

தலைவன் தோழி கேட்குமாறு கூறும் கூற்றில் தன் நோய்க்கு மருந்து நெஞ்சங் கவர்ந்த தலைவியேயன்றி வேறொன்றுமில்லை என்கிறான் (நற்.பா.80) நற்றிணையில் இடம் பெறும் இக்கருத்தை வள்ளுவர்,

"பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து" (குறள் 1102) என்று கூறியுள்ளார். நற்றிணையில் திருக்குறள் கருத்து இடம் பெறுவதைத் தி.பொ. நாராயணசாமி பாரதி தமது கட்டுரையில் குறித்துள்ளார்.

சிலப்பதிகாரத்தில் திருக்குறள் கருத்துக்கள் எடுத்தாளப் பட்டுள்ளன. அ. சிதம்பரனார், ச. அகத்தியலிங்கம் ஆகிய இருவரும் சான்றுகளுடன் இதனை விளக்குவர். அ.சிதம்பரனார் காட்டும் சான்றுகளாவன.

ஐம்புல உணர்வுகள் குறித்து வள்ளுவர்,
"கண்டு கேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள"(குறள் 1101)

என்று கூறியுள்ளார். இக்கருத்தை இளங்கோவடிகள்,

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே" (சிலப்பதிகாரம், 2:73-74)

என்று கோவலன் கூற்றில் அமைக்கிறார்.

குறளாசிரியர் ஒரு பெண்ணின் கண்ணை,
"கூற்றறமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம் இம்மூன்றும் உடைத்து" (குறள்.1085) என்று வருணிப்பார். இதனை இளங்கோவடிகள், ஒரு தலைவன் முன்னர்த் தோன்றும் ஒரு பெண்ணின் கண்கள் கண்கள் அல்ல. அவை கூற்றம் ஆகும். (சிலம்பு 7, பக்.21-24) என்கிறார்.

ச. அகத்தியலிங்கனார் காட்டும் சான்று: ஒரு பெண் தன்னைக் காத்துக் கொள்வதுடன், தன் கணவனையும் தகை சான்ற சொல்லையும் காத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தை வள்ளுவர்,

"தற்காத்து தற்கொண்டான் பேணி தகைசான்ற
சொற்காத்துச்சோர்விலாள் பெண்" (குறள் 56) என்று கூறுகிறார்.

இப்பெண்மைப் பண்புகள் கண்ணகியிடம் உள்ளன என்பதனை இளங்கோவடிகள், "தீதிலா வடமீனின் திறம் இவள்திறம் (சிலம்பு 1, பக்.27)

'கற்புக்கடம் பூண்ட இத்தெய்வமல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண்டிலமால்' (15. 143-144)
என்ற அடிகளிலும்,

'நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்ம்' என்ற அடிகளிலும்,

'யானோ அரசன் யானே கள்வன்
மன்மத காக்கும் தென்புலங்காவல்
என்முதல் பிழைத்தது கெடுகஎன் ஆயுள்' என்ற அடிகளிலும் அமைத்துக் காட்டியுள்ளார்.

அ.சிதம்பரனார் கட்டுரையில் ஐம்புல உணர்வுக்குரிய பொருளைப் பெண்மைக்கு ஏற்றிக் கூறியதைக் காணலாம். ச.அகத்தியலிங்கனார் கட்டுரையில் வேறு வேறு நிகழ்ச்சிகளின் வாயிலாகப் பெண்மைப் பண்புகள் விளக்கப்படுவதைக் காண முடிகிறது.

மணிமேகலையில் திருக்குறள் இடம் பெறுவதைக் கட்டுரை ஆசிரியர் அ.அருளம்பலம் விளக்கியிருப்பினும் இரு சான்றுகள் மட்டும் ஈண்டு விளக்கப்படுகின்றன.

'தெய்வந் தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை' (குறள்.55) என்னும்

குறளைச் சீத்தலைச் சாத்தனார் தமது காப்பியத்தில் அப்படியே அமைக்கிறார்.

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை கேளாய்' (மணி. 22:59-61)

என்று அவர் கையாள்வதில் இரண்டாம் அடியில் மழைக்கு அடைமொழி தருவதுடன் குறளாசிரியரைப் பொய்யில் புலவன் என்றும் அழைக்கிறார்.

'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்' (குறள் 360) என்ற குறள்

மணிமேகலையில்,

வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்று
உள்ளந்தன்னில் உருப்பன மூன்றும் (மணி. 24.129-130)

என்று அமைந்துள்ளது.

இக்குறளுக்கு விளக்கம் தரும் பரிமேலழகர் கல்வி கற்கும் மாணவர் எவ்வாறு ஆசிரியரிடம் பாடம் கற்க வேண்டும் என்று விளக்குகிறார். உடையார் முன் இல்லார் போல் கற்றார் தலையர் அவ்வாறு கற்காதவர் கடையர் என்பதே பரிமேலழகர் பகுப்பாய்வு விளக்கம். பயனிலையைப் பரிமேலழகர் கொண்டு சேர்த்துப் பொருள் விளக்கம் தரத் தேவையில்லை. உடையார் என்பதே பயனிலைதான். கற்றாரே உடையார் எனக் கொள்வதே பொருந்தும் என்று கூறிப் பரிமேலழகர் உரையை மறுத்தும் கூறுவர். இதனைக் கட்டுரையாசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார். பரிமேலழகரை மறுத்து உரை கூறும் மற்றவர்தம் கருத்துக்கு அரணாக,

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடையரேனுமிலர்" (குறள் 430) என்ற குறளை எடுத்துக் காட்டித் தம் மதம் நிறுவுகிறார்.

பரிமேலழகர் குறள் ஒன்றிற்குத் தரும் விளக்கம் திருமுருகாற்றுப் படைச் செய்திக்குப் பொருந்தி வருவதைக் கட்டுரையாசிரியர் கா.பொ. இரத்தினம் விளக்கியுள்ளார் (சிலம்பு 17, பக்கம்.569-570).

"இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள" (குறள் 223)

இக்குறளில் முதல் அடிக்கு விளக்கம் தரும்போது ஒருவன் தன் இல்லாமையை உரைக்கு முன் குறிப்பறிந்து கொடுக்க வேண்டும். பிறன் ஒருவனிடம் அவன் சென்று கையேந்தாதபடி நிறையக் கொடுக்க வேண்டும். இப்போது கொடுப்பதற்கு ஒன்றுமில்லை எனப் பொருளை மறைத்து வைத்துக் கொண்டு இல்லை என்று கூறாது கொடுக்க வேண்டும் என்றும் பிறர் கூறுவர் என்று பிறர் கொள்கை விளக்கத்தையும் தந்துள்ளார். இம்மூன்று தன்மைகளும் முருகனிடம் இருப்பதாக நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் விளக்குகிறார். கொள்கை அடிப்படையில் இலக்கியத்தோடு இணைத்துப் பார்ப்பது ஒப்பியல் அணுகுமுறைக்குத் துணையாகும்.

'செல்லான் கிழவன் இருப்பின்' என்று தொடங்கும் குறளுக்குப் பரிமேலழகர் காளிங்கர், மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதியார் ஆகியோர் எழுதிய உரைகளில் காளிங்கர் உரையே சிறப்பு எனும் ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தொகுதி குமரன் ஆண்டு மலர் என்ற நூல் மதிப்புரைக்கு வந்ததாகும்.

கல்வி என்ற அதிகாரத்தில் இடம் பெறும் குறள்

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையவரே கல்லாதவர்" என்பதாகும்.

இதனை ஒப்பாய்வு செய்து கட்டுரையாசிரியர் கு. சுந்தரமூர்த்தி விளக்கியுள்ளார்.

தண்டபாணி எழுதிய திருக்குறள் விருத்தியுரையை அறிமுகம் செய்யும் வகையில் 40 குறட்பாக்களின் விளக்கம் இடம் பெறுகிறது. (சிலம்பு 29, ப.177) உவமைகள் கூறுவதில் சுருங்கச் சொல்லி விளங்க

வைப்பர் வள்ளுவர் என்ற கருத்தை வலியுறுத்தும் கட்டுரை வெளிவந்துள்ளது. (சிலம்பு 17, பக்.161-164)

பரிமேலழகர் உரையை விட மணக்குடவர் உரையே சிறப்புடையது என்று டாக்டர் சொ. சிங்காரவேலன் ஏற்ற சாட்சிகள் தந்து விளக்குகிறார். (சிலம்பு 26, பக்.91-96)

ஒரு நாட்டிற்குத் தக்கார், தாழ்விலாச் செல்வம், தள்ளாவிளையுள் ஆகிய மூன்று தன்மைகள் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறியிருப்பது இக்காலத்திற்குப் பொருந்தி வராது என்று கட்டுரைக் கிறார் க. விபுலானந்தர் (சிலம்பு 10, பக்.177 - 180)

திருக்குறளுக்குப் பதின்மர் உரை வகுத்திருப்பினும் பரிமேலழகர் உரையே சிறப்புடையது என்று சொல்லப்பட்டு வருகிறது. அவரது உரைச் சிறப்புப் பற்றியும், அவரது உரைக்கு மறுப்புக் கூறும் கட்டுரை பற்றியும் செந்தமிழ்ச் செல்வியில் பல கட்டுரைகள் காணப்படுகின்றன.

உரைச் சிறப்புக் குறித்து சொ. சிங்காரவேலன் விளக்கியுள்ளார் (சிலம்பு 26,ப.91-96). குடம்பை தனித்தொழிய என்ற குறட்டொடரிலுள்ள குடம்பை என்பது முட்டையாகும் என்பார் பரிமேலழகர் மற்ற உரை யாசிரியர்கள் கூடு என்றனர். புள்ளுடன் தோன்றாமையான் குடம்பை கூடாகாது. எனவே முட்டையின் நீங்கிய பார்ப்புப் பறக்காமையினால், குடம்பை முட்டையாகாது அல்லாமலும் முட்டை உருவுச் சிதைவு பெற்ற பின்னர்தான் குஞ்சு வெளி வரும் ஆனால் உயிரோ உடம்பை விட்டு நீங்கும் போது உடம்பு சிதைவதில்லை. உடம்பைக் கூடு என்ற அழைப்பது மரபு. முட்டை என்று எவரும் சொல்ல மாட்டார்கள். நார் முதலியவற்றால் பறவைக் கூடு அமையும். முட்டையின் மேல்தோடு எதனாலும் ஆக்கப்படுவதில்லை. உடம்புக்குப் பறவைக் கூடுதான் உவமையாக வரலாம், முட்டை உவமையாகாது.

பரிமேலழகர் உரையில் காணப்பெறும் முரண்பாடுகளையும் செந்தமிழ்ச் செல்வி கட்டுரையாசிரியர் சுட்டுகிறார். கொல்லாமை என்ற அதிகாரத்தில்,

> "நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
> கொன்றாகும் ஆக்கம் கடை" (குறள் 328)

என்ற குறளுக்குப் பரிமேலழகர் கூறிய உரை அடுத்த குறள் (329) உரையுடன் முரண்படுகிறது. துறவிக்கு அழகு ஒருயிரையும் கொல்லா திருப்பது என்று ஒரு குறளுக்கு விளக்கம் தந்துவிட்டு, வேள்வி செய்யும்

போது கொலை செய்யலாம் என்று உரை கூறுவது முரணாக உள்ளது இம் முரணைச் சுட்டிக் காட்டும் கட்டுரையாசிரியர், சொ. சிங்கார வேலனார் ஆவர். இதுபோன்ற முரண் உரைகளைத் தொகுத்தும் பகுத்தும் ஆய்வதற்குக் குறளில் இடம் உண்டு என்பதை இக்கட்டுரை சுட்டும்.

திருக்குறள் கருத்துக்கள் நற்றிணை, சிலப்பதிகாரம், கம்பராமாயணம், தேவாரம், திருவாய்மொழி ஆகியவற்றில் பயின்று வந்த இடங்களைச் சுட்டும் கட்டுரைகள் பல செந்தமிழ்ச் செல்வியில் வெளி வந்துள்ளன. ஏனைய பிற இலக்கியங்களிலும் வருமிடங்கள் விளக்கப் பட்டிருப்பினும் சங்க நூல்களில் நற்றிணையும் காப்பியங்களில் சிலப்பதிகாரமும் கம்பராமாயணமும் சிறப்பிடம் பெறுகின்றன. இதற்குக் கட்டுரையாசிரியர்களின் இலக்கியத் தோய்வு ஒரு காரணமாகலாம். கம்பரும் வள்ளுவரும் (சிலம்பு 14 பக்.537-543) என்ற கட்டுரையை ச. அருளம்பலம் எழுதியுள்ளார். கம்பனும் வள்ளுவனும் (சிலம்பு 23, பக்.441) என்று அ. மகாலிங்கம் எழுதியுள்ளார். தலைப்பு ஒன்றாயினும் பார்வை வேறு. ஒருவர் காட்டிய குறள் எடுத்துக்காட்டை மற்றவர் கையாளவில்லை. குறளும் சிலம்பும் (சிலம்பு 33 பக்.273-275) என்ற தலைப்பில் ச. அகத்தியலிங்கமும், திருக்குறளும் சிலப்பதிகாரமும் (சிலம்பு 31, பக்.282-288) என்ற தலைப்பில் அ. சிதம்பரனாரும் கட்டுரைகள் எழுதியிருந்தாலும் இருவர் கோணங்களும் வேறு வேறு. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக் கோவைக் கட்டுரைகளை வழங்குவோர் வேறு வேறு இடத்தவர். வேறுபட்ட அறிஞர்கள். ஒன்றைப்போன்று மற்றொன்று என்று கூறுமளவில் ஒரு கட்டுரையும் இதுவரை வெளிவந்ததில்லை. செந்தமிழ்ச் செல்வியையும் இப்பார்வையில் காணில் இத்தொகுதிகளும் ஆய்வுக் கோவைகளே என அறியலாம்.

வள்ளுவர் வாய்மொழிக் கோடல் (சிலம்பு 9, 10 பக். 255-261, பக். 65 - 69) ஒரு தொடர் கட்டுரையாகும். ‘அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு’ என்ற முதற் குறளை அப்படியே தமது நூல்களில் எப்படிக் கையாண்டுள்ளனர் என்பதற்குக் காட்டுகள் தருகிறார் கட்டுரையாசிரியர் எஸ். கணபதி. இவர் எடுத்துக்காட்டும் நூல்கள் சிவசிவ வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, பொருள் வணக்கம், பதிமுதுநிலை ஆகியனவாகும். இந்நூலாசிரியர்களின் ஆளுமையைக் கட்டுரையாசிரியர் வெளிப்படுத்துகிறார். நால்வர் நான்மணி மாலை "நன்றறிவாரிற் கயவர் ...." என்ற குறள் அப்படியே புகுந்த நிலையை விளக்குகிறார். குறளிலுள்ள ஓர் அடியை மட்டும் கையாளும் திருவருட்பாவை எடுத்துக் காட்டுகிறார்.

சங்க கால முதல் இன்று வரை குறட் கருத்தும் சொற்றொடர்களும் சற்றொப்ப எல்லா இலக்கியங்களிலும் இடம் பெற்றிருப்பதைச் செந்தமிழ்ச் செல்வி கட்டுரைகள் காட்டுகின்றன. ஒப்பாய்வுக்கு வழிவகுக்கும் நிலையில் கட்டுரைகள் விளங்குகின்றன. எல்லோரும் நன்கறிந்த சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்றே பெரும்காப்பியங்கள் மட்டுமின்றிச் சிற்றிலக்கியங்களிலும் குறள் பயின்று வருவதைச் சுட்டும்போது அரிய நூல்களிலிருந்து காட்டுகள் தந்து விளக்குவது இவ்விதழ் வாசகர்க்கு இலக்கிய அறிவை மிகுவிப்பதாகும்.

இதழாசிரியர் எழுதிய திருவள்ளுவரும் அவர் தம் நெறிப்படி வாழ்ந்த காந்தியடிகளும் (சிலம்பு 44 பக்.1.3) ஆலனும் வள்ளுவரும் (சிலம்பு 41 ப.230) ஆகிய கட்டுரைகள் கொள்கையும் அதன் பயன்பாடும் என்ற வரிசையில் இடம் பெறத்தக்கன. காந்தியடிகள் மேற்படிப்புக்கு இங்கிலாந்துக்குச் சென்ற போது தாயிடம் கூறிய மூன்று சத்தியங்களைக் கூறி, அவற்றிற்கு இணையான திருக்குறட்பாக்களை எடுத்துக் காட்டி இதழாசிரியர் விளக்குகிறார். தென் ஆப்பிரிக்காவில் வழக்கு மன்றத்தில் தலைப் பாகையை எடுக்க மறுத்த செய்திக்கு மானம் என்ற அதிகாரத்திலுள்ள குறளை எடுத்துக் காட்டுகிறார். அங்கு இந்தியர் உரிமைக்குப் போராடிய போது ஏற்பட்ட இழப்பிற்குக் குறள் ஒன்று எடுத்துக் காட்டப் பெறுகின்றது. காந்தியடிகளின் வாழ்க்கையைக் குறட் கருத்தோடு இணைத்துக்காட்டும் கா.பொ. இரத்தினம் தமது கட்டுரையில் பிறர்க்கின்னா செய்யாமை, வாய்மை போன்ற கருத்துக்களை விளக்குகிறார் (சிலம்பு 28, பக். 185-192).

திருவள்ளுவரின் கருத்துக்கள் இயேசுபிரான் தம் சீடர்களுக்கு உரைத்த உபதேச மொழிகளில் காணப்படுகின்றன. இருவர் மொழிகளையும் ஒருசேர ஒப்புநோக்கிக் கட்டுரை எழுதியுள்ளார் ப.சோதிமுத்து. காலம், நாடு, இனம், சமயம், சமூகம் ஆகியவற்றில் முற்றிலும் வேறுபட்ட இருவர் கருத்துகளை ஒப்பிட்டு ஒற்றுமைக் கூறுகளை விளக்கியுள்ளார் இவர். பெருஞ்சிற்பிகளின் சிந்தனை ஒரே தன்மை உடையதாகும் என்பதற்கு ஏற்பக் கருத்தொற்றுமை காணப்படுகிறது.

> “மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்
> ஆகுலநீர பிற” (குறள் 34)

என்ற அகத்தின் தூய்மை விவிலியத்தில்,

'இருதயத்தில் தூய்மையுள்ளவர்கள் பேறு பெற்றவர்கள்' (மத்தேயு 5:8) என்று குறிக்கப்படுகிறது. அடக்கமுடைமை, பிறனில் விழையாமை பொறையுடைமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ், துறவறம், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வெகுளாமை, கொல்லாமை, நிலையாமை, தெரிந்து தெளிதல் ஆகிய அதிகாரங்களில் உள்ள குறட்பாக்களை விவிலிய மொழிகளுடன் ஒப்புமைப்படுத்திக் காட்டி வள்ளுவரும் இயேசு பிரானும் எந்த அளவிற்குக் கருத்தொற்றுமை உடையவர்கள் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார் கட்டுரையாசிரியர். உலகில் சான்றோர் எங்குத் தோன்றினும் அவர்களிடையே காணப்பெறும் அறக்கருத்துகள் ஒன்று போலவே அமையும் என்பதனை இவ்வகை ஒப்பாய்வு வழி அறியலாம். ஜேம்ஸ் ஆலன் குறிப்பிடும் கருத்து திருக்குறளில் காணப்படுவதாக இதழாசிரியர் கூறியுள்ளார். பிற நாட்டு அறிஞர்களின் வாசகங்களைத் திருக்குறளோடு ஒப்பிட்டுக் காண வேண்டும் என்பதை வலியுறுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைந்துள்ளது. ஒப்பாய்வு செய்வார்க்குத் தூண்டுகோலாய் உள்ளது.

திருக்குறளைக் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று என்று கருதாமல் மேற்கணக்கு நூல்களுள் ஒன்றாகக் கருதவேண்டும் என்பதற்குப் பன்னிரு பாட்டியலில் உள்ள கணக்கு நூல்களைச் சுட்டிக் காட்டி விளக்குகிறார் சங்குப் புலவர் (சிலம்பு 39, பக்..21-25)

திருக்குறளுக்கு உரை வகுத்தோர் பதின்மர் எனினும் இன்று ஐவர் உரைகளே கிடைத்துள்ளன. 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் வந்துள்ள திருக்குறள் கட்டுரைகளில் ஐவர் உரைகளும் குறிக்கப் பெற்றாலும் அவருள் பரிமேலழகர், மணக்குடவர் உரைகளின் சிறப்புகள் விதந்தோதப் பெறுகின்றன. பரிமேலழகர் உரைச் சிறப்பை ஒருவர் பாராட்டி எழுதினால் மற்றொரு கட்டுரையாளர் மணக்குடவர் உரைச் சிறப்பைப் போற்றி எழுதுவார். சிலர் காளிங்கர் உரையின் திறனை விளக்குவர். ஒரே கட்டுரையாளர் இரு வேறு கருத்துகளை விளக்குவதையும் காணலாம். பரிமேலழகர் உரைப் பெருமை பேசும் சொ. சிங்காரவேலன் உரையில் காணப்பெறும் மாறுபட்ட கருத்துகளையும் எடுத்து விளக்கியுள்ளார். (சிலம்பு 26, பக். 91-96) திருக்குறட் கவிதைக் கேணி என்ற ஒரே கட்டுரையிலேயே சிறப்பும் முரணும் விளக்கப்படலால் திறனாய்வுப் போக்கினை உட்கொண்டதாக அமைகிறது.

ஒப்பாய்வு நெறிக்கு உகந்த முறையில் திருக்குறள் கட்டுரை யாளர்கள் திருக்குறள் கருத்துகணை விளக்கும்போது பிற தமிழ் இலக்கியங்களிலிருந்து மேற்கோள் காட்டுகின்றனர். திருக்குறளுக்கு முற்பட்ட சங்க இலக்கியத்தில் திருக்குறள் கருத்து இடம் பெறுவதை

மு.வரதராசனார் சுட்டிக் காட்டுகிறார். (சிலம்பு 28 பக்கம் 36) திருக்குறளில் சங்க இலக்கிய மணம் என்ற தலைப்பில் எழுதப் பெற்ற இக்கட்டுரையில்,

"சுழல்போலும் மாலைக்குத் தூ தாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை" (குறள் 1128)

என்பதை எடுத்துக் காட்டி முல்லைத்திணைக் காட்சியை விளக்குகிறார். 'தலைவனைப் பிரிந்த தலைவி, தோழியிடம் இந்தக் கொடிய மாலை நேரமும் கல்லாக் கோவலர் ஊதும் புல்லாங்குழலிசையும் சேர்ந்து என்னை வாட்டுகிறது. என் செய்வேன் தோழீ என்று ஏங்கித் துடிக்கிறாள்.' இந்த முல்லைத் திணைக் காட்சிக்கு ஏற்ற குறளை ஒப்புமை காட்டிப் பேசுகிறார்.

பொறியியலாளர் கண்ணோட்டத்தில் திருக்குறள் புதிய விளக்கம் பெறுவதை 'வள்ளுவர் கண்ட எண்ணும் எழுத்தும்' என்ற கட்டுரையில் காணலாம்.(சிலம்பு 67, பக். 29-29) திருக்குறளில் இல்லாதது எதுவுமில்லை. அது எக்காலத்துக்கும் பொருந்தும் ஒரு நூல் என்று பெருமை பேசுகிறோம். பரிமேலழகர் உரையுடனோ அல்லது மற்றையவர் கருத்துடனோ அமையாது, இன்றைய அறிவியல் வளர்ச்சியில் பின்னணியில் திருக்குறளை ஆய்ந்து அறிவதே இன்றைய காலக்கட்டத்தில் எமக்குப் பெருமை அளிப்பதாகும்" என்று கட்டுரை யாசிரியர் பொறியியல் வல்லுநர் க. கணேசலிங்கம் கூறுகிறார். அரசு இல்லையேல் அமைதி ஒழுங்கு கெடும். நாகரிகம் மறையும். அரசு நிலைத்து நிற்காது என்பது சட்ட அறிஞர்களின் கொள்கை.

"எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்" (குறள் 548)

என்ற குறள் வழி எளிய முறையில் ஆராய்ந்து நீதிமுறை செய்ய வேண்டும் என்றும் அவ்வாறு செய்யாவிடில் அரசன் தாழ்ந்த நிலையில் நின்று தானாகவே கெட்டுவிடுவான் என்றும் வள்ளுவர் கூறுகிறார். நாட்டில் மக்களுக்குத் தீமை விளையும்போது அதனை விலக்கி முறை செய்வது அரசனின் கடமை. மக்கள் வந்து முறையிட்டால் தான் செய்ய வேண்டும் என்பதில்லை. நாள்தோறும் தானே நாடி முறை செய்யும் மன்னவன் நாடு வளம் பெறும். அவ்வாறு செய்யாதவன் நாடு படிப் படியாக நலிந்துவிடும்.

"நாடொறும் நாடி முறைசெய்யா மன்னன்
நாடொறும் நாடு கெடும்" (குறள் 553)

என்ற குறள் வழி இதனை அறியலாம்.

இறைமாட்சியே முறை செய்தலில் தான் அடங்கி இருக்கிறது. பகைவரிடமிருந்து நாடடைக் காப்பது, மக்களுக் நீதி வழங்கி முறை செய்வது ஆகிய இரண்டுமே நல்லாட்சியின் அடையாளங்கள் என்பர் சட்ட நூலறிஞர்கள்.

"அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடைய தரசு" (குறன் 384)

என்று இறை மாட்சியைக் குறள் விளக்குகிறது. மக்களிடையே முறை செய்தலும், பகைவர் படையை வெற்றி கொள்ளுதலும் அரசின் கடமைகள் என்று சட்டவியல் கூறுகிறது. இக்குறட் கருத்து இச்சட்டவியல் கருத்தையே கொண்டுள்ளது என்கிறார் கட்டுரையாசிரியர்.

உடைமை இருப்பின் வறுமை இல்லை இன்மையின் துன்பத்தைப் போக்குவது செல்வம். செல்வம் உடைமை வறுமையைக் காட்டிலும் துன்பம் தரும் நிலை உடையது. அதுவே கொடுங்கோலனாட்சியில் வாழும் மக்கன் நிலையாகும். செங்கோல் மன்னன் ஆட்சியில் கீழ் இருக்கப் பெற்றால் பொருளில்லாத வறுமை நிலையை விடச் செல்வி நிலை துன்பம் உடையதாகும்.

"இன்மையின் இன்னாது உடைமை முறை செய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்" (குறள் 558)

என்று குறள் வழி அச்சட்ட நுணுக்கத்தைக் கட்டுரையாசிரியர் விளக்குகிறார்.

"குடிதழிஇக் கோலோச்சும் மாநில மன்னவன்
அடிதழிஇ நிற்கும் உலகு" (குறள் 544)

என்ற குறளில் வள்ளுவர் கூறும் நெறி, இன்றையக் குடியரசுக் கொள்கையேயாகும். அறவியல் அணுகுமுறை வழி அரச நீதிகளை விளக்கிச் சட்டவியலார் கருத்துடன் ஒப்பிட்டுக் கட்டுரையை அமைத்துள்ளார்.

வள்ளுவர் வகுத்த அரசியல் முறை இக்காலத்திற்குப் பொருந்தி வராது என்ற கருத்துடைய கட்டுரையும் செல்வியில் வந்துள்ளது. க.விபுலானந்தர் எழுதிய திருக்குறள் மாட்சி (சிலம்பு 10 பக். 177-180) என்ற கட்டுரை இதனை விளக்கும். இவ்வாறு இருதரப்பினர்க்கும் இடம் தருவதால் நிலைபேறுடைய இலக்கியமாகத் திருக்குறள் திகழ்கிறது. இரு வேறு நிலைகளையும் வாசகன் அறிந்து கொள்ள உதவும் செந்தமிழ் இதழாகச் செல்வி திகழ்கிறது.

குறளுக்கு மதிப்பீட்டுத் திறனாய்வு நூல் ஒன்றுளதாயின் அது திருவள்ளுவமாலையாகும். திருவள்ளுவர் மாலையில் தமிழ் நாகனார் பாட்டு.

"எல்லாப் பொருளும் இதன்பால் உளஇதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால் - சொல்லால்
பரந்தபா வால்என் பயன் வள்ளுவனார்
சுரந்தபா வையத் தனை" என்பது குறளின் பெருமையை நிலை நாட்டும் என்று பி.மா. சோமசுந்தரம் தமது 'குறளில் ஒன்று' என்ற கட்டுரையில் (சிலம்பு 38, ப.171) கூறியுள்ளார்.

வழுதி என்ற பாண்டியன் வேண்டியவாறு திருக்குறளை வள்ளுவர் தந்ததாக வள்ளுவமாலைச் செய்யுளைக் காட்டி விளக்குகிறார். அ.சிதம்பரனார் (சிலம்பு 15, பக். 578 - 580). அதற்கு அவர் காட்டும் பாடல் கீரந்தையார் இயற்றியது.

"தப்பா முதற்பாவால் தாமாண்ட பாடலினால்
முப்பாலில் நாற்பால் மொழிந்தவர் - எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள்ளுவர்." என்பதாகும்.

இந்திய அறநூல்களை ஆராய்ந்தவர் செர்மானியப் பேரறிஞர் ஆல்பர்ட்சுவிட்சர். 'இந்தியச் சிந்தனையும் வளர்ச்சியும்' என்ற நூலைச் செர்மனி மொழியில் எழுதினார். இந்நூலைத் தமிழில் மொழி பெயர்த்து மு. சதாசிவம் ஒரு கட்டுரையைச் செந்தமிழ்ச் செல்வியில் எழுதியுள்ளார். (சிலம்பு 38, பக்.17-22) இக்கட்டுரை வழித் திருக்குறளின் பெருமையை உணர முடிகிறது. செர்மானியரின் திருக்குறள் பற்றிய கருத்தைத் தமிழக மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது. குறளில் துறவறம் வானத்திலிருக்கும் மேகம் போலத் தொலைவில் உள்ளது. நல்லது நல்லதுக்காகவே செய்ய வேண்டும் என்பது குறளில்

தெளிவாக்கப்பட்டுள்ளது. உலகியலுக்கும் உலக வாழ்க்கைக்கும் ஏற்ற சிறந்த நெறிகளைக் கூறுகிறது குறள். செய்யத்தக்கன, செய்யத் தகாதன எனப் பகுத்து அறநெறிக் கருத்துக்களைக் குறள் கூறுகிறது. உலக இலக்கியங்களில் உயர்ந்த அறிவுரை தாங்கிய அறநூல் அருமையிலும் அருமை என்று கட்டுரையாளர் விளக்குகிறார்.

உருசிய நாட்டுப் பேரறிஞர் அலெக்சாண்டர் பியாதி கார்க்கி திருக்குறள் குறித்துக் கூறியதையும் மொழியாக்கம் செய்து கா. அப்பாத் துரை கட்டுரையாக்கியுள்ளார். (சிலம்பு 33, பக்.304-307).

பிறநாட்டு நல்லறிஞர் வரிசையில் கால்டுவெல், கவர், ஜே..லாசரஸ் ஆகியோர் குறளைப் பாராட்டிய நிலைகளை கு.பரமசிவன் விளக்கியுள்ளார். (சிலம்பு 28, ப.452) ஜே..லாசரஸ் கூறிய கருத்தைக் காணின் திருக்குறளை யாரும் திருத்த முயல்வது தவறு என்பது தெரிய வரும். திருக்குறளைத் திருத்தம் செய்ய முயல்வது முடியாத ஒன்றாகும். அதன் அமைப்பைச் செம்மைப்படுத்துவதென்பதும் அப்படியே. குறளைத் திருத்திய பாதிரியாரைத் தியாகராச செட்டியார் சரிதத்தில் காண்கிறோம். இன்றும் சிலர் தங்கள் கொள்கைக்கு ஒத்துவரவில்லை என்பதற்காகக் குறளைத் திருத்த வேண்டும் என்று கூறலாம். நம் நாட்டிலக்கியத்தைப் படித்து அதன் பெருமையை உணர்ந்து பிற நாட்டறிஞர் கூற்றைப் புரிந்து கொள்ளாதவர்கள்தாம் குறளைத் திருத்த முயல்வர்.

மாஸ்கோவில் கீழை நாட்டு மொழிப் பேரறிஞர்களின் உலக மாநாட்டில் திருக்குறளின் பெருமை பேசப்பட்டுள்ளது. அதனைத் தமிழ் கூறுநல்லுலகம் அறியும் பொருட்டு அ.சிதம்பரநாதன் செட்டியார் 'திருவள்ளுவர் உலகினர்க்குத் தரும் செய்தி' என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்துள்ளார் (சிலம்பு 35, பக்.170-174)

செருமானியம், பிரஞ்சு, இலத்தீன், பாரசீகம் ஆங்கிலம் ஆகிய பிற நாட்டு மொழிகளிலும், இந்தி, தெலுங்கு, மலையாளம், வங்காளம் ஆகிய இந்திய மொழிகளிலும் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டுள்ள செய்தியை உள்ளடக்கிய கட்டுரையைத் தெ.பி. பாலதண்டாயுதபாணி எழுதியுள்ளார். (சிலம்பு 27 பக்.135-140)

'குறள் கூறும் இறைநெறி' என்ற தொடர் கட்டுரையில் மா.சண்முகசுப்பிரமணியம் ஒப்பாய்வு நெறிக்கு வழி காட்டுகிறார். (சிலம்பு 64, பக்.366-375)

அர்னால்டு டாயன்பி எழுதிய நூலிலிருந்து மேற்கோள் காட்டி அதற்கு இணையான திருக்குறளை எடுத்துக் காட்டுகிறார். ஆன்மீக நெறியே அனைத்து மக்களுக்கும் அடிப்படையான நெறியாகும் என நான் நம்புகிறேன் என்கிறார் ஆர்னால்டு டாயன்பி.

**I hold that the goal of education right to be religious, not mercenary. Education right to be a search for an understanding of the meaning and purpose of life and for discovering the right way to live. The right spiritual way is, I believe, fundament identical for all human beings "ARNOLD TOYNBEE in CHOOSE LIFE"**

இருபதாம் நூற்றாண்டு அறிஞர்கள் கூறும் இந்தக் கருத்தை வள்ளுவர்,

'கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்' என்று கூறியுள்ளார்

என்று ஒப்பமைப் பகுதியாகக் கட்டுரையாளர் கூறியிருப்பது வாசகனைச் சிந்திக்கச் செய்கிறது. வள்ளுவப் பெருமையை உணர வைக்கிறது.

கல்வியறிவினைக் கடந்து ஐம்புல அறிவுக்கு அப்பாலாய் நிற்கும் மெய்ப்பொருள் அறிவினை வாலறிவு என்றும் வாலறிவால் உணரப்படும் இறைவனை வாலறிவன் என்றும் வள்ளுவர் பெயர் அமைத்திருப்பது குறள் நெறியின் உயர்வினைக் காட்டும் என்று குறளாய்வு செய்கிறார் கட்டுரை ஆசிரியர். திருவள்ளுவர் காலம் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது மறைமலையடிகளாரின் ஆய்வு முடிவு.

இந்து மதம் தமிழ்நாட்டில் கால் கொண்ட காலமும் ஈராயிரம் ஆண்டைக் கடந்ததே என்று கூறி வள்ளுவரின் மதம் சமண சார்பினதே என்று நிறுவ முயல்வதைத் திருவள்ளுவர் சமயச் சார்பில்லாதவரா? என்ற ஆய்வுக் கட்டுரையில் காண முடிகிறது. (சிலம்பு 65 பக். 384-387) இத்தொடர் கட்டுரையை ஆய்வு நோக்கில் எழுதியவர் திருத்துறைப்பூண்டி திருத்துறைக்கிழார் ஆவார். ஒரு புலவர் கூறும் கருத்துகள் எல்லா மத நூல்களிலும் காணப்படுவதனால் அவரை ஒவ்வொருவரும் தத்தம் மதத்தவர் என்று முடிவு செய்தல் பொருந்தாது என்று கட்டுரையாளர் கருதுகிறார் (சிலம்பு 65 ப.4654). இலக்கியம்

தோன்றிய காலத்தையும் அன்றைய மக்கள் வாழ்க்கை முறை முதலியவற்றையும் கருத்தில் கொண்டு இலக்கியத்தை ஆய்வதே ஏற்புடையது என்று இவ்வாசிரியர் கூறுகிறார். இக்கோட்பாட்டை மனத்திற் கொண்டு ஆய்ந்த பின் பொய்யில் புலவர் சமண சமயஞ் சார்ந்தவரே எனப் பல ஏதுக்களைக் காட்டி நிறுவியுள்ளார்.

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம் எனப் பெயர் மாற்றம் செய்யப் பெற்ற பின்னரும் திருக்குறள் தொடர் கட்டுரை வெளி வந்துள்ளது. மாமனார் சென்ற பாதையில் மருமகனார் சென்று மரபைக் காத்து இதழின் நோக்கத்தைப் பின்பற்றி வருவதை இத்தொடர் கட்டுரைகள் வழி அறிய முடிகிறது.

அன்பு என்பது தம்மை மறந்து அனைத்துமான அண்டத்தோடு தாமும் இணைந்துள்ளோம் என்ற உண்மையினை உணர்ந்து அதனை உறுதி செய்யும் முயற்சியே ஆகும் என்ற ஆர்னால்டு டாயன்பீ கருத்திற்கு இணையான திருக்குறளைக் கட்டுரையாசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

“அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு” (குறள் 73)

நானும் இவ்வுலகமும் ஒன்றே என்று உயிரும் உலகமும் இணைந்தே உள்ளன எனும் உண்மையினை உணரும் நிலையில்தான் அன்புணர்வு பெருகுகிறது. அதுவே அன்போடு இயைந்த வாழ்வு என்று குறள் கூறும் இறைநெறி தொடர் கட்டுரையில் மா.சண்முகசுப்பிரமணியம் விளக்கம் தருகிறார் (சிலம்பு 64, பக்.204-208).

இயற்கையோடு நாம் இசைந்துள்ள உணர்வில் உதிப்பதே அன்புணர்வு. ‘நான்’ என்ற தனித்த எண்ணத்தால் எண்ணற்ற துன்பங்கள் விளைகின்றன. தன்னலம் மறப்பதே அன்பின் அடிப்படையாகும். இன்பம் பெய்வதாகும். உலகளாவிய அன்புணர்வு “அருள்” ஆகின்றது. அன்பிற்கும் அருளுக்கும் எதிர்மாறானது ‘அவா’ என்பது. உலகத்தைத் தனதாக்கி அதனால் இன்பத்தினை எய்தும் முயற்சியே “அவா”. இம்முயற்சி வெற்றி பெறுவதில்லை என்று குறள் கூறும் இறைநெறியில் அன்பு, அருள், அவா ஆகியவற்றை விளக்குகிறார். இச்சொற்களின் விளக்கத்தைக் குறள் வழி நின்று விளக்கும் போது ஆர்னால்டு டாயன்பீ எழுதிய The Choice of life என்ற நூலிலிருந்து ஏற்ற ஆங்கில வாக்கியங்களை மேற்கோள்களாக அமைத்துள்ளார். ஒப்பாய்வு நெறியில் இலக்கியங்களை அணுக முயல்வார்க்கு இத்தகு

கட்டுரைகள் பெரிதும் துணை என்பதில் ஐயமில்லை. உபநிடதக் கருத்துகளை இணைத்துக் கூறும் போக்கிலும் கட்டுரை அமைந்துள்ளது. ஆய்வாளர்க்கு அருவிருந்தாய் அமைந்த கட்டுரைகள் இடம் பெறலால் செல்வியின் தமிழ்ப் பணி சிறந்து விளங்குகிறது.

'செந்தமிழ்ச் செல்வி' இதழில் திருவள்ளுவர் வகுத்த அரசியல் குறித்துக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். வள்ளுவர் முடியாட்சி பற்றி எழுதியிருந்தாலும் குடியாட்சிக்கும் பொருந்தும் வண்ணம் அமைத்திருப்பதைக் கே.ஜெகதீசன் என்பவர் 'வள்ளுவர் வகுத்த அரசியல்' என்ற கட்டுரையில் விளக்கியுள்ளார். (சிலம்பு 27, பக். 427-300) மழை பெய்யாவிட்டாலும் உயிர்களுக்குத் துன்பம் நேர்ந்தாலும் அரசன் பேரச்சம் கொள்கிறான். குடிகளைக் காக்கும் தொழிலை முடியாட்சிக்கால அரசன் மேற்கொள்வதால் குடியரசின் தன்மைகள் அடங்கிய முடியரசைப் பற்றியே வள்ளுவர் வலியுறுத்துகிறார் என்று கட்டுரையாளர் எழுதியுள்ளார். சமுதாய வளர்ச்சிக்குத் துணை புரியவே அரசியல் அமைப்பு எழுந்துள்ளது என்று திரு. க.க. மணியம் என்பவர் 'திருக்குறளில் சமுதாய வளர்ச்சி' என்ற கட்டுரையில் (சிலம்பு 39, பக்.503-506) கூறுகிறார்.

"படைகுடி கூழ் அமைச்சு நட்பரண் ஆறும்
உடையவர் அரசருள் ஏறு" (குறள் 381)

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லதரசு" (குறள்.385) ஆகிய வள்ளுவரின் கருத்துக்கள் புறநானூற்றில்,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான் உயிர் என்பதறிகை
வேல்மிகு தானை வேந்தர்க்குக் கடனே" (புறநானூறு பா.186)

என்று வந்துள்ளன. சமுதாய வளர்ச்சிக்காகவே அரசியல் அமைப்பு என்பதை மக்கள் உணர வேண்டும். அதனால் மக்கள் தங்களுக்கென ஒரு நல்ல அரசியல் அமைப்பை ஏற்படுத்திக் கொள்வது நல்லது. அப்படிச் செய்தால் சமுதாயம் வளர்ச்சி பெறுவது உறுதி என்று கட்டுரை யாளர் கூறியுள்ளார்.

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்" (குறள்.629)

என்ற குறள் வாயிலாக அரசியல் உண்மைகளை மா.வே. நெல்லையப்ப பிள்ளை உணர்த்துகிறார்.

உலக வாழ்வில் ஒருவனுக்கு வருகின்ற இன்பத்தை அனுபவிப்பதற்கும் துன்பத்தை அனுபவிப்பதற்கும் மனம்தான் காரணம். இன்பம் வரும்போது அதனை விரும்பாமலே நுகர்ந்தால், துன்பம் வரும்போது அதனை அவன் வெறுத்துத் துன்பமடைய மாட்டான் என்று பரிமேலழகர் உரைக்கு மேல் உரை தருகிறார் கட்டுரை யாசிரியர். இன்பத்தில் விருப்பு, துன்பத்தில் வெறுப்பு ஆகிய இரண்டும் இல்லாத ஒருவன் பேரின்பம் பெறுவான். இந்த உயர்ந்த மனநிலையை ஓர் அரசன் பெற்றால் அவன் அரசியல் வினைகளைத் தளர்ச்சியில்லாமல் செய்வான் என்று விளக்குகிறார்.

குறள் தரும் அரசியலில் சட்ட நெறியைச் சுட்டுகிறார் மா.சண்முக சுப்பிரமணியம். முறை செய்தல் அரசின் தலையாய நிலைத்த கடன் என்று சட்ட அறிஞர் சாலமண்ட் வலியுறுத்துவதை எடுத்துக் காட்டுகிறார். மக்களைக் காக்க முறை செய்தல் இன்றியமையாததாகும். முறை செய்யும் அரசு மக்களால் போற்றத்தக்கது.

"முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்" (குறள் 388)

என்ற குறளில் மூன்று சட்டக் கருத்துகள் இருப்பதாகக் கூறுகிறார். மக்களுக்கு நீதி எளிதில் விரைவில் கிடைக்க வேண்டும் என்பதே நல்லரசின் முதற்கடமையாகும். சமுதாய மக்களிடையே அமைதியும் ஒழுங்கும் இருக்க முறை செய்தல் என்ற சட்டம் தேவை முறை செய்யும் தமிழரின் வாழ்வியல் குறள் வழி அமைதல் வேண்டும் என்று குறளுக்கு முன்னும் பின்னும் புலவர்களின் சிந்தனையில் பதிந்து எக்கால இலக்கியத்திலும் குறளின் தாக்கம் காணப்படுவதால் குறட் கருத்தைப் பரப்பினால் தமிழ் இலக்கியப் பணி சிறக்கும் என்று சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. குறளின் பெருமையைப் பறை சாற்றவும் இக்கட்டுரைகள் துணைநிற்கின்றன.

எழுத்தெனப்படும் அகர முதல னகர இறுவாய் முப்பஃதென்ப என்று தொல்காப்பியர் கூறியதற்கு இணங்க, திருவள்ளுவர் முதற்குறள் அகரத்திற் தொடங்கிக் கடைசிக் குறள் னகர ஒற்றில் முடிக்கிறார்.

இந்நூலில் ஏறக்குறைய 12000 சொற்கள் உள்ளன. அவற்றில் சுமார் நூற்றுக்கு எழுபது உயிரெழுத்துக்களாலான சொற்கள் உள்ளன என்று குறிப்பிட்டுள்ளார் பா.வே.பொன்னுசாமி நாயக்கர். (சிலம்பு 14, ப.506)

சங்க காலத்தில் கள்ளும், சூதும் எவ்வாறு போற்றப்பட்டன என்பதையும், திருவள்ளுவர் அதனைக் கூடாது என்று கூறியதையும் விளக்கிக் காட்டியுள்ளார் செ.ரா. இராமசாமி பிள்ளை. (சிலம்பு 29, பக்.405-410)

பழங்காலத்தில் கள்ளினை அரசர் முதல் கீழ்மக்கள் வரை எளிதாக உண்டு களித்து வந்தனர். இதற்குச் சான்று சங்க இலக்கியங்கள். சங்க காலத்திலிருந்து ஔவை மூதாட்டியார், தம்மைப் போற்றிச் சிறப்புச் செய்த அதியமான் நெடுமான் அஞ்சி தன் பருவுடல் நீத்த காலை அவன் தமக்குச் செய்த சிறப்புக்களுள், இக்கள்ளினைத் தமக்குக் கொடுத்துத் தானும் உண்ட செயலையே பாராட்டிய இரங்கலுரையாக,

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தாம் மகிழ்ந்துண்ணும் மன்னே"

எனக் கூறி வருந்துவராயினார். முற்கால நூல்களிலிருந்து பிற்கால நூல்கள் வரை கள்ளினைப் பாராட்டிப் பேசுகின்றன.

அடுத்து, சூதென்பது அரசர், அறிஞர், தொழிலாளர் முதலியோர் மன ஒய்வுக்காக - மனக்கவலையை மாற்றுதற்காக - உழைப்புக் கடுமை குறைப்பதற்காக - அமைந்த ஒருவகை விளையாட்டு. இது போர் முறையை ஒட்டி அமைக்கப்பட்ட கதை போன்ற ஒன்றே என்று எண்ணுதற்கேற்ற தன்மையை உடையதாக அமைந்திருக்கின்றது. இப்போக்கில் அமைந்த சூதாட்டமே சதுரங்கம், சொற்கேட்டான், தாயம், சீட்டாட்டம் போன்ற விளையாட்டுக்கள் ஆகும்.

முற்காலத்து நளன், தருமன் கதைகளும், தற்காலத்துக் குதிரைப்பந்தயம், சீட்டாட்டம், ஐரிசு லாட்டரி, கதைப் போட்டி, குறுக்கெழுத்துப் போட்டி முதலியனவும் நமக்குச் சான்று காட்டுகின்றன.

ஆனால், வள்ளுவர் அறநூலில் பொருட்பாலில் கள்ளும், சூதும் என்னும் தனித்தனி அதிகாரமாக அமைத்துக் கள்ளினால் வரும் கெடுதலையும், சூதினால் எய்தும் சீர்கேட்டையும் பல வகைகளில்

தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டி, அவைகளை அறவே நீக்குமாறு வற்புறுத்திக் கூறுகின்றார்.

கட்குடியின் தீமையை வள்ளுவர் மிக அழுத்தத் திருத்தமாகக் கண்டிக்கிறார். வள்ளுவர் எடுத்த எடுப்பிலேயே 'கள்ளின் மீது விருப்பம் கொண்டுள்ளவர் பிறரால் மதிக்கப்படார்'. 'தம் புகழையும் இழந்து விடுவர்' என்று கூறுகிறார். மேலும்,

'ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துகூ களி'

'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்'

'கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு'

என்னும் குறள்களில் ஒருவன் கள்ளுண்டு, களித்து வெறி கொண்டு பிதற்றலைப் பெற்ற அவன் தாய் கூடப் பொறுக்க மாட்டாள் என்பது கூறப்படுகிறது.

அடுத்து, கள்ளோடு தொடர்புடைய சூதினை எடுத்துக் கொண்டு விளக்குகிறார். அதில்,

"வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று"

ஒருவன் வெற்றியே பெறுவதானாலும் சூதாட்டத்தை விரும்பக்கூடாது. அவன் வென்ற வெற்றியும், தூண்டில் இரும்பை இரை என்று விழுங்கித் தன் உயிரிழக்கும் மீன் தன்மையானவன் எனச் சூதால் பெற்ற பொருளினால் வரும் கேட்டினை விளக்கினார். பின்னர்,

'சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல்'

'அகடாரார் அல்லல் உழப்பர் சூதென்றும்
முகடியால் மூடப்பட்டார்'

'உடைசெல்வம் ஊன்ஒளி கல்வி என்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்'

என்னும் குறட்பாக்களில் சூதினால் பல துன்பங்களும் ஒருங்கே தொடருமென்றும், இதனை மேற்கொண்டார் உடுக்கும் ஆடையும், அதைப் பெறுவதற்கு வேண்டும் பொருளும் உண்டற்குச் சோறும், தன் நல்ல பெயரும், கல்வியும் ஒருங்கே இல்லாதவராய் ஏங்குவரென்றும், அதனைக் கைவிட்டு நன்னெறியிற் படர வேண்டுமென்றும் அறிவுறுத்து கிறார்.

திருக்குறளில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்று எண்கள் எய்தியுள்ள ஏற்றத்தை பி.மா. சோமசுந்திரன் குறிப்பிட்டு, அவ் எண் உள்ள குறளுக்கு உரையாசிரியர்கள் பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காளிங்கர், தாமத்தர் மற்றும் புலவர் குழந்தை போன்றோர் உரை எழுதியுள்ள திறத்தைக் குறிப்பிட்டுள்ளார் (சிலம்பு 38, 39 - ப.81, ப.171)

குறளில் இறுதி அடியில் ஒரே சொற் கொண்டு (இடும்பை தரும், காண்பதறிவு) வருகின்ற குறள் நான்கினைக் குறிப்பிட்டு அதற்குப் பரிமேலழகர் உரையைக் காட்டியுள்ளார் எம்.முனிசாமி ஆச்சாரி (சிலம்பு 12 ப.271 ப.323) உதாரணமாக,

'இடும்பை தரும்' குறள் எண்: 138, 508, 510, 892

'காண்பதறிவு' குறள் எண்: 355, 358, 423, 424

மேற்கூறிய குறள்களின் இறுதி அடியில் வருகின்ற அரிது என்ற சொற்றொடர் உள்ள குறட்பாக்கள் பத்து 8, 16, 29, 248, 377, 419, 499, 606, 647, 1049 எனக் குறிப்பிட்டுள்ளார் இ. சிவகுருநாதன் (மேலது ப.473)

கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களும் பாயிரத்தைக் குறிக்கும் என்று கூறி, அந்நான்கு அதிகாரங்களிலுமுள்ள குறளை மனத்தில் வைத்துக் கொள்ளும் பொருட்டு, குறளின் முதலடியை வரிசைப்படுத்திக் காட்டியுள்ளார் மா.வே. நெல்லையப்ப பிள்ளை (சிலம்பு 3,5, பக். 187-191, ப.1118)

திருக்குறளை அதிகார முறையாக மனத்தில் வைத்துக் கொள்ளும் பொருட்டுச் சூத்திரமாக (வரிசையாக) அமைத்துக் காட்டியுள்ளார் மு.பொ. ஈசுவரமூர்த்தியா பிள்ளை (சிலம்பு 28, பக். 296-298)

ஔவையார் என்ற படம் வள்ளுவரின் மதிப்பைக் குறைக்கும் வகையில் அமைந்துள்ளது என்பதற்குச் சான்றாகச் சில கருத்துக்களை வெளியிடுகிறார் கா.பொ. இரத்தினம்.

வள்ளுவர் ஓர் ஏழை போலவும், சங்கப் புலவர்கள் அறிவிலார் கூட்டம் போலவும், அவ்வையார் படத்தில் காட்சியளிக்கின்றார்கள். ஔவையார் பாடிய ஒரு பாட்டின் முதலிரு அடிகளை ஒரு குட்டிப் புலவர் பாடியதாகவும் இப்படம் அறிவிக்கிறது.

வாழ்விலே மாத்திரமின்றிப் படங்களிலும் இவ்வாறு பல பிழைகளும் முரண்பாடுகளும் ஏற்படுவதற்குக் காரணம் நம் மக்கள் ஆராய்ச்சியும் உணர்ச்சியும் இன்றி எல்லாவற்றையும் நம்பி வந்தமையே ஆகும். இவை யெல்லாம் வேத வாக்குகள்; ஆராயாதீர்கள்; ஆராய்ந்தால் நரகத்திலே போவீர்கள்; என்று கூறுகிறவர் நம் நாட்டில் இருக்கிறார்கள். இந்த மயக்க நிலைகள் ஏமாற்றும் வித்தைகள் அறிவுக் கொலைகள் நீங்க வேண்டுமெனின் மக்கள் யாவரும் வள்ளுவன் சொல்லே வேதமெனக் கொண்டு போற்றல் வேண்டும். உண்மையை உணர வேண்டும். திருக்குறள் வகுக்கும் நெறியில் ஒழுக வேண்டும்.

திருவள்ளுவர் திருநாள் தமிழரின் தனிப்பெரும் திருநாள் என்பதை விளக்கிக் காட்டியுள்ளார் கா.பொ.இரத்தினம்(சிலம்பு 27, ப.284)

உலகப் பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் யாருடைய பாராட்டுக்கும் உரியவர். அவருடைய திருநாள் தமிழரின் தனிப்பெருந் திருநாள். அன்பும் அருளும் அறமும் ஆட்சி செய்யுந் திருநாள். ஆதலினால், சாதிபேதமின்றியும், அரசியற் கட்சி வேறுபாடின்றித் தமிழ் மக்கள் யாவரும் ஒவ்வொரு வீட்டிலும் அவருடைய திருநாளைக் கொண்டாட வேண்டும்.

திருவள்ளுவர் திருநாளை மாசி உத்திரம் என்று ஒரு சாராரும், வைகாசி அனுடம் என்று மற்றொரு சாராருங் கருதுகின்றனர். இந்த இரு மாதங்களில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப்படுகிறது. இந்த இரு நாட்களில் ஒன்றினைக் கொண்டாடுதலே நல்லது என முடிவு செய்து இது பற்றிய கருத்தினை அறிவிக்குமாறு தமிழ் அறிஞர்கள் சிலருக்கும், தமிழ்ச் சங்கங்கள் சிலவற்றுக்கும் எழுதியிருந்ததன் பேரில் பெரும்பாலோர் வைகாசி அனுடத்தைத் திருநாளாகக் கொண்டாடுதல் நன்று என அறிவித்துள்ளனர். எனவே, வைகாசி அனுடத்தையே திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாடுதல் வேண்டும்.

நாட்குறிப்பில் திருக்குறள் அமைந்துள்ளதைக் குறித்துக் குறிப்பிட்டு உள்ளார் அ. சிதம்பரனார் (சிலம்பு 6 பக். 721 - 724)

சென்னையிலும், நெல்லையிலும் சைவ சித்தாந்த சங்கத்தார் குறள் பரப்ப எடுத்துக் கொண்டுள்ளனர். அக்குழுவினர் முன் இரண்டனா விலையில் தனிக்குறளையும், தற்பொழுது எட்டாணாவில் கா.சுப்பிரமணிய பிள்ளை செவ்வனே சீரிய உரையுடன் கூடிய திருக்குறளையும் கணக்கின்றிச் சிறு தொகைக்கு விற்று மனைதோறும் குறளைப் புகுத்தும் மாண்பும், திருமங்கை நகரில் 'தினபோதனாலயத்தார்' நாடோறுந் திருக்குறளைச் சிறிது சிறிதாய்ப் பரப்புஞ் செம்மையும், கொழும்பில் 'மெய்கண்டான் அச்சுயந்திர சாலை' யார் ஆண்டுதோறும் தினம் கிளக்கும் தெய்திக்கட்டில் ஒவ்வொரு இதழுக்கும் ஒவ்வொரு குறட்பாவைப் பதித்து, மெய்கண்டான் திருக்குறள் கியாலண்டர் (நாட்குறிப்பு) என்று பெயரிட்டு அத்தெய்திக் (தேதி) கட்டுகளில் மூலம் திருக்குறள் பரப்புஞ் செய்கையும் திருக்குறளுக்கு உள்ள பெருமையை எடுத்துக் காட்டுகிறது.

திருக்குறளில் அர்ச்சனை செய்து பூசிக்க வேண்டும் என்று கூறுகிறார் இனியன். (சிலம்பு 27 பக்.433-436) திருக்கோவில்களில் மலர் தூவிப் போற்றுதலாகிய அருச்சனை 108 என்னும் எண்ணும், 300 எண்ணும், 1008 என்னும் எண்ணும் கொண்ட முறையாற் செய்கின்றனர். நாமும் அறத்துப்பால், பொருட்பால் என்னும் இரண்டு பால்களிலும் உள்ள அதிகாரங்கள் 108. எனவே ஒவ்வோர் அதிகாரத்தின் முதற்பாட்டைச் சொல்லி 108 அருச்சனை செய்யலாம்.

திருக்குறள் முழுவதையும் சொல்லி 1008 என்னும் எண்ணும் மேலாக அருச்சிக்க வேண்டும். திருவள்ளுவர் திருவிழாவிலும், திருவுலாவிலும் அவர்தம் திருமுன் ஆண் பெண் அனைவரும் அமைதியாக இருந்து 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' ஒருவர் ஓத, அவர்பின் ஓதி வருதல் வேண்டும். எல்லார் திருக்கைகளிலும் திருக்குறள் இருத்தல் வேண்டும். அருச்சனை ஓதுங்கால் ஒருவர் ஓத, ஒருவர் பின் ஒருவராய் அனைவரும் ஓத, ஒருவர் மலர் தூவல் வேண்டும். மலருக்கு ஈடாகத் தளிரும் தூவலாம்.

திருக்குறளை எவ்வாறெல்லாம் பரப்பலாம் என்பதைக் குறிப்பிடுகிறார் இனியன். சிறியோர் முதல் பெரியோர் வரை அனைவரும் திருக்குறளை ஓதுதல்; வீடுகளிலும், கழகங்களிலும் பல்வேறு திருக்குறளை அழகுறப் பொறுத்து வைத்தல், ஒருவரோடொருவர் உரையாடும் பொழுதெல்லாம் திருக்குறள் கையாளுதல், திருக்குறளைச் சொல்லுங்கால் திருக்குறளும் தத்தம் சமய நூல்களும் சிறந்ததொன்றும்

உடன்கொண்டு செல்லுதல், அங்கே அமைதியாக இருந்து ஓதுதல் இவை போன்ற பிறவும் திருக்குறளைப் பரப்பும் சீரிய வழியாகும்.

திருக்குறள் முப்பால் அல்ல. அது நாற்பால் ஆகும் என்றும், திருக்குறள் மேற்கணக்கின் மேனூலாக வைத்துப் போற்ற வேண்டும் என்றும் கட்டுரையாசிரியர் சங்குப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

திருக்குறளுக்குரிய ஒன்பது பெயர்களுள் முப்பால் என்பது ஒன்று. திருவள்ளுவமாலையில் முப்பால் என்பது அதிகமாக இடம்பெறுகின்றது. எனவே திருக்குறள் முப்பால் எனக் கூறுவது பொருத்தமுடையதாகும்.

அக்கால நீதிநூல்கள் யாவும் கீழ்க்கணக்கில் வைக்கப்பட்டு உள்ளன. ஒரு சிறந்த நீதி நூல். எனவே, அதுவும் கீழ்க்கணக்கிலும் அடங்கும்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆங்கு
பகவன் முதற்றே உலகு'

என்று முதற் குறளுக்குப் பாடவேறுபாடு காட்டியுள்ளார் கபசம். 'யான் வறியன்' என்னும் இளிவரலைக் கூறி இரவாமையும், அதனைத் தன்மாட்டுக் கூறி இரந்தார்க்குக் கரவாது ஈதலும் உடைய உயர் குடியிற் பிறந்தவர் வேளாளர் என்பதைச் சிறப்பித்துக் கூறியுள்ளார் அ.மு. சரவணமுதலியார்.
பெண்மையின் சிறப்புப் பகுதியாகக் குறளில் இல்வாழ்க்கை, மக்கட்பேறு, வாழ்க்கைத் துணைநலம் ஆகிய அதிகாரங்கள் மிளிர்கின்றன என்று குறிப்பிட்டுள்ளார் எல்.கிருஷ்ணவேணியம்மாள். அறவழியே ஈட்டும் பொருளும் அறவழியே அனுபவிக்கும் இன்பமுமே என்றும் அழியாமல் நிற்பன என்பதையும், கொலை நிகழாமற் காத்தலை வற்புறுத்தும் பகுத்துண்ணுதலாகிய அறத்தைப் பற்றியும் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளதைக் கட்டுரையாசிரியர் வி.சச்சிதானந்தம், க.வெள்ளைவாரணன் ஆகியோர் தெரிவித்துள்ளார்கள்.

கல்வியின் சிறப்பாகக் குறளில் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, அவையறிதல், அவையஞ்சாமை, சொல்வன்மை ஆகிய அதிகாரங்கள் அமைந்துள்ளன என்று கட்டுரையாசிரியர் தியாகராசர் குறிப்பிட்டுள்ளார்.

வள்ளுவர் தம் குறள்களில் அன்புநெறி, அருள்நெறி ஆகியவற்றைப் புலப்படுத்திக் காட்டியுள்ளதை மேரி மாசிலாமணி தெரிவித்துள்ளார். குறட்பாக்களில் மிளிரும் உவமை நயத்தைக் கட்டுரையாசிரியர் தமிழ்மறைத் தொண்டர், மா. இராசமாணிக்கம், பி.எல். சாமி ஆகிய மூவரும் தெரிவித்துள்ளார்கள்.

திருக்குறளுக்குப் பதின்மர் உரை வகுத்து இருந்தாலும் இன்னும் புத்துரைகள் தோன்றிக் கொண்டு இருப்பது, எல்லோரும் உரை எழுதும் அளவிற்கு குறளில் எளிமையும், சிறப்பும் உள்ளன என்பதே என மு.சதாசிவம் தெரிவித்துள்ளார்.

திருக்குறளைத் தாழ்த்திக் கூறுகின்ற கருத்துக்களைச் சிவானந்த அடிகள் மறுத்துரைத்துத் திருக்குறள் ஒன்று மட்டுமே உலகப் பொதுமறை என்று அவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

'அகரமுதல னகர இறுவாய்' என்று தொல்காப்பியர் கூறியதற்கு இணங்க, திருவள்ளுவர் முதற் குறள் அகரத்தில் தொடங்கிக் கடைசிக் குறள் னகர ஒற்றில் முடிக்கிறார் என்பதைக் கட்டுரை ஆசிரியர் பா.வே. பொன்னுசாமி நாயக்கர் தெரிவித்துள்ளார்.

சங்க காலத்தில் கள்ளும் சூதும் எவ்வாறு போற்றப்பட்டன என்பதையும், திருவள்ளுவர் அவற்றைக் கூடாது என்று கூறியதையும் விளக்கிக் காட்டியுள்ளார் செ.ரெ. இராமசாமி பிள்ளை.

குறளின் இறுதி அடியில் 'இடும்பை' 'காண்பதறிவு', 'பத்து' என்று முடிகின்ற குறள்களைக் கட்டுரையாசிரியர் இ. சிவகுருநாதன், எம்.முனுசாமி நாயக்கர் ஆகியோர் தெரிவித்துள்ளார்.

திருக்குறள் அதிகார முறையாக மனத்தில் வைத்துக் கொள்ளும் பொருட்டு, சூத்திரமாக அமைத்துக் காட்டியுள்ளார் மு.பொ. ஈசுவர மூர்த்தி.

கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களும் பாயிரத்தைக் குறிக்கும் என்றும் கூறி அந்நான்கு அதிகாரங்களில் உள்ள குறளின் முதலடியை வரிசைப்படுத்திக் காட்டியுள்ளார் மா.வே. நெல்லையப்ப பிள்ளை.

ஔவையார் படம் வள்ளுவரின் மதிப்பைக் குறைக்கும் வகையில் அமைந்துள்ளது. இது ஒரு கட்டுக் கதையாக அமைத்துக் காட்டி இருந்தாலும் அதனைப் பொறுக்காது எதிர்த்து எழுதி வள்ளுவன் சொல்லே வேதமெனப் போற்றல் வேண்டும் என்பதைக் கட்டுரையாசிரியர் க.பொ. இரத்தினம் தெரிவித்துள்ளார். இது, அவர் வள்ளுவர் மீது கொண்ட பற்றைச் காட்டுகிறது எனலாம்.

திருவள்ளுவர் திருநாள் மாசி உத்திரம் என்று கூறியுள்ளார் கா.பொ. இரத்தினம்.

நாட்குறிப்பில் திருக்குறள் அமைந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார் அ.சிதம்பரனார்.

திருக்கோவில்களில் மலர் தூவிப் போற்றுதல் போலத் திருக்குறளால் அர்ச்சனை செய்து பூசிக்க வேண்டும் என்றும், திருக்குறளை எவ்வாறெல்லாம் பரப்பலாம் என்பதையும் கட்டுரையாசிரியர் இனியன் குறிப்பிட்டுள்ளார்.

மேற்கூரிய கருத்துக்களை ஆராயும் போது செந்தமிழ்ச் செல்வி இதழில் திருக்குறள் கட்டுரையாசிரியர்கள் திருக்குறள் பற்றித் தத்தம் கருத்துக்களை எழுத இடம் கொடுத்தமை உணர முடிகிறது.

## பாட்டும் தொகையும்

1975ஆம் ஆண்டு சூன் திங்கள் வெளியிடப்பட்ட இந்தியப் பல்கலைக் கழகத் தமிழ் ஆசிரியர் மன்ற ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவையில் எழுதப்பட்ட உலோச்சனார் பற்றிய சமணச் சிந்தனைகள் என்ற ஆய்வுக் கட்டுரைக்கு மறுப்பாக உலோச்சனார் சமணரா? என்ற ஆய்வுக் கட்டுரை எழுதியுள்ளார் ஆ.சிவலிங்கனார்.

சமண சமயக் கொள்கையான உயிர்க் கொலை கூடாது என்பதை உலோச்சனார் பாடல்களில் அமைத்துள்ளார் என்று கூறி நற்றிணை, அகநானூறு ஆகியவற்றிலிருந்து சான்றுகள் தந்து விளக்கம் தரப்பட்டுள்ளது. சமயக் கொள்கை அடிப்படையில் புலவர் எந்த உவமையையும் பயன்படுத்தவில்லை என்று மறுத்துக் கூறிய கட்டுரை யாசிரியர் உலோச்சனார் சமணரல்லர் என நிலைநாட்டியுள்ளார். (சிலம்பு 50 பக்.97-101)

சங்க இலக்கியங்களில் பொருனையாறு பற்றிய குறிப்புகளை எடுத்து விளக்குகிறார் கோ.வே. பெருமாள். 'தமிழ் கண்ட தண்பொருநை' என்ற தமது கட்டுரையில் காலந்தோறும் ஆற்றின் பெயர் மாறி வந்த நிலையையும் இலக்கியச் சான்றுகள் வழி நிறுவியுள்ளார். (சிலம்பு 50, பக்கம் 160-170)

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் காணப்படும் மீன்களை வகைப்படுத்தி விளக்குகிறார் பி.எல்.சாமி (சிலம்பு 50, பக்கங்கள் 83, 147, 195, 350, 401, 451, 498, 542, 557, 591) அயிலை மீன் (அகநானூறு பாடல் 60, 70), அயிரை மீன் (குறுந்தொகை 128, 166,178) ஆரல் மீன் (குறுந்தொகை 91) கொழுமீன் (நற்றிணை 153), குழல் மீன் (சிறுபாண் 102-103) வரால் மீன் (அகநானூறு 196)

தமிழ்நாட்டில் மீன்களின் பெயர்கள் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன. சங்க நூல்களில் மீன்களின் பெயர்கள் காணப்படுகின்றன. பாடல்களில் இடம் பெறும் மீன் பெயர்களைக் கொண்டு தமிழ்நாட்டின் நிலப்பரப்பையும் மீன்கள் கிடைக்குமிடங்களையும் அறியலாம். சங்க நூல்களில் மீன்கள் என்ற தலைப்பில் பி.எல். சாமி எழுதிய தொடர் கட்டுரை இவ்வகையில் பயனுள்ளதாகும். கடல் நீர் மீனான அயிரை அகநானூற்றில் இரு பாடல்களில் (60,70) குறிக்கப் பட்டுள்ளது. 'அயிலை துழந்த அம்புளி' (60) என்பது அயிலை மீன் இடப்பட்ட புளிக்குழம்பைக் குறிக்கும். கோடிக்கரை அருகே உள்ள சிறுமுடிப்பாக்கத்தில் பரதவர் அயிலை மீனைப் பாதீடு செய்தனர் என்ற செய்தி அகநானூற்றில் (70) வந்துள்ளது.

அயிரை என்ற சிறிய மீன்வகையை இருஞ்சேற்று அயிரை என்று நற்றிணை (272) நவிலும். வயல்களிலும் கழிகளிலும் இவ்வகை மீன்கள் இருந்தன என்று சங்க நூல்கள் கூறும்.

மருதம், நெய்தல் நிலப்பரப்புகளைப் பின்புலமாகக் கொண்டு நிகழும் நிகழ்ச்சிகளின் போது இவ்வகை மீன்களின் வருணனை காணப்படுகிறது. ஆராமீன் என்று இன்று கூறப்படும் ஆரல் மீன் பற்றிய செய்தி சங்க நூல்களில் உண்டு. இது நன்னீர் மீன வகையாகும். ஆரல் தடியைத் தீயிலிட்டுச் சுட்டுத் தின்ற செய்தி புறநானூற்றில் (320) வந்துள்ளது.

கயல்களின் வகைகளாக வெண்கயல், கருங்கயல், செங்கயல் எனத் தமிழலக்கியங்கள் கூறும். இன்று இதனை வெண்கெண்டை என்று சில பகுதிகளில் அழைப்பர். கயலும் கெண்டையும் வேறு வேறு மீன்

வகைகள் என்று சங்க நூல்கள் கூறும் என்பதற்குத் தக்க சான்றுகள் தந்து பி.எல். சாமி விளக்கியுள்ளார். (சிலம்பு 50, பக்கம் 151-152)

கெடிறு என்ற மீன் வகை ஐங்குறுநூற்றில் வந்துள்ளது. இது நெய்தல் நிலத்து மீனாகும்.

'பெருங்கடற்கரையது சிறு வெண் காக்கை
இருங்கழி யினக்கெடிறாருந் துறைவன்' (ஐங்குறு 167)

கெடிறு இன்று கெளிறாக உள்ளது; கெளுத்தி என்றும் கூறுவர். இது முள் உள்ள சிறப்பு மீனாகும். கொழு மீன் என்ற பெயர் அகநானூறு நற்றிணை ஆகிய நூல்களில் வந்துள்ளது. சுவையுடைய இம்மீனை எளியவர் உண்ட செய்தி அகநானூற்றில் (110) உள்ளது. கொழுமீனோடு கள்ளை உண்ணும் பழக்கத்தைப் புறப்பாடல் கூறுகின்றது. ஆற்றில் நீர் வற்றும் போது சேற்றில் கிடைக்கும் இம்மீனின் இயல்பு குறித்துச் சங்கப் பாடல்கள் பேசும். நெத்திலி மீன் என்பதும் இதுவே.

சிறுபாணாற்றுப் படையில் (162-163) வரும் குழல் மீன் கடற்கரைப் பட்டின வீடுதோறும் அன்று கிடைத்திருப்பதால் நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல் பெறப்படும். இந்த மீன் கடலில் பத்தடி வரை துள்ளும் தன்மை உடையதால் துள்ளு என்று இம்மீனை அழைப்பர்.

புறநானூற்றில் (391) இடம் பெறும் நுழை மீன் கடற்கரை மீனாகும். பாம்பு போல உடலும் மீன் போன்ற வாலும் கொண்டது மலங்கு என்ற விலாங்கு மீன். புறநானூற்றில் (61) நெய்தல் நில மீனாக இது குறிக்கப்படுகின்றது. வரால், ஒடு நன்னீர் மீனாகும். சங்க நூல்களில் பல பாடல்களில் இம்மீன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. தூண்டில் வழி இம்மீனைப் பிடிப்பர். இப்பழக்கம் சங்க நூலிலும் கூறப்பட்டுள்ளது.

எலும்பற்ற மீன் சுறாவாகும். அகநானூறு, நற்றிணைப் பாடல்களில் இவ்வகை மீன் பற்றிய குறிப்பு மிகுதி. இது கடல் வாழ் மீனாதலின் நெய்தல் நிலப்பரப்பு வருணனையில் வந்துள்ளது. வலை வீசிப் பிடிக்கும் போது வலையைக் கிழித்திடும் வலிமையுடையது என்பதை நற்றிணை (303) கூறும். இது ஆட்கொல்லி மீன் என்பதனையும் சங்க நூல் சுட்டும். ஆற்றுச் சுறா கடற் சுறா என்ற இருவகை பற்றிய குறிப்பும் உண்டு.

கடற்கரையிலும் ஆற்றுக்கழி முகத்திலும் காணப்படும் மற்றொரு வகை மீன் சிறு மீனாகும். நற்றிணையில் (91) இம்மீன் பற்றிய

வருணனை கூறப்பட்டுள்ளது. இவ்வகை மீன்களை நாரைகள் குஞ்சுகளுக்குக் கொண்டு கொடுக்கும் நிகழ்ச்சிகளைச் சங்க நூல்களில் காணலாம்.

சங்க நூல்களில் இடம் பெறும் பெருமீன் திமிங்கலமே என்று இக்கட்டுரையாசிரியர் 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் விளக்கியுள்ளார். மீன்கள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் மீன் வகைகள் வளர்ந்துள்ள நிலையை மேலும் ஆராய்வதற்குப் பயன்படும்.

சிவ.பார்வதியம்மாள் எழுதிய பாணர் வரலாறு என்ற கட்டுரை ஓரின வரலாறுதான் எனினும் பத்துப்பாட்டு, புறநானூறு, சிலப்பதிகாரம், ஐங்குறுநூறு, கலித்தொகை, திருக்கோவையார் ஆகிய நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் தந்து விளக்கப்பட்டிருப்பது ஒரு மொழி இலக்கியத்தைப் படிக்கும் உணர்வைத் தரும்.

தமிழில் கலைச் சொல்லாக்கம் உருவாக மொழி வளம் உடையது என்கிறார் ஞா. தேவநேயன்.

'சங்கப் புலவர்களின் மங்காப் பெருமை' என்ற கட்டுரையாசிரியர் பனைக்குளம் மு.அப்துல் மஜித், அரசர்க்கு அறிவுரை வழங்கிய புலவர் பெருமையைப் புறநானூற்றின் வழி விளக்குகிறார்.

மு. ராசாக்கண்ணு முதலியார், யாமம் என்ற சொற் பொருளை குறள், குறுந்தொகை, கலித்தொகை, மணிமேகலை ஆங்கிலக் கட்டுரை ஆகியவற்றில் துணையுடன் ஆராய்கிறார்.

அகநானூற்றில் உரையாசிரியர் ஊர் என்பது குறித்துக் குடந்தை டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் கட்டுரை எழுதியுள்ளார். கல்வெட்டு வழி மணக்குடி என உறுதிப்படுத்துகிறார்.

'யாதும் வினவல்' என்ற தலைப்புடையது, கலித்தொகை, புறநானூறு ஆகிய இலக்கியங்களில் நாடகமே என அவ்வை சு.துரை சாமிப் பிள்ளை எழுதியுள்ளார்.

கண்ணகி திருமணம் என்பது கலித்தெலைகப் பாடலின் விளக்கம். பண்டிதமணியின் சங்கத் தமிழ் ஒரு வானொலி செவ்விய சொற்களால் விளக்குங் கருவியாம் (சிலம்பு 6, ப.99)

பதிற்றுப்பத்து, கற்றறிந்தோர் ஏத்துங்கலி என்ற தலைப்புகளில் ஆறாஞ் சிலம்பில் கட்டுரைகள் வந்துள்ளன. கா.சு.பிள்ளை எழுதிய தமிழர் தனி மாண்பு சங்க இலக்கியச் செய்திகளை உள்ளடக்கியதே.

குறிஞ்சிப் பாட்டின் உள்ளுறையை ஆராய்கிறார் ந.மு. வேங்கடசாமி நாட்டார் (சிலம்பு 5 பரல்12)

## அதிகாரத் தலைப்பு

செய்ந்நன்றி அறிதல் என்ற தொடர் கட்டுரை 1941-42இல் வெளியான 19ஆம் சிலம்பில் இடம் பெற்றுள்ளது. இக்கட்டுரை ஆசிரியர் உயர் பள்ளித் தமிழாசிரியர் சே.ம. கோதண்டராம முதலியார், தமக்குப் பிறர் செய்த நன்றியை மதித்தல் என்று பொது வகையான இத்தலைப்பிற்கு விளக்கம் தந்து, திருக்குறள், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், ஆசாரக்கோவை, புறநானூறு, நாலடியார் ஆகிய நூற்களிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார். சிறப்பு வகையால் விளக்க முற்படும் போது அரசரின் நன்றி மறவாமை என்று தலைப்பிட்டுப் பாரதக் கருணனின் செயல்பாட்டினை விளக்குகிறார்.

## குறளடித் தலைப்பு

'நீரின்றி அமையாது உலகு' என்ற தனிக் கட்டுரையைத் என்.கே. வேலன் எழுதியுள்ளார். நீர் ஆவியாகவும் கட்டியாகவும் மாறும். 2 பங்கு நீர் வளியும் (Hydrogen) ஒரு பங்கு உயிர்வளியும் (Oxygen) சேர்ந்தது நீர் போன்ற அறிவியல் கருத்துக்களை விளக்கிப் பல குறட்பாக்கள் இடம் பெறச் செய்துள்ளார்.

புதை பொருளாய்வுக் கட்டுரையாக அமைவது அரிக்கமேடு எனும் தலைப்பினது. புதுச்சேரிக்குப் பக்கமுள்ள அரியாங்குப்பத்திலிருந்து ஒரு கல் தொலைவில் செஞ்சியாற்றங்கரையில் உள்ள இடமே அரிக்கமேடு. தென்னிந்திய நாகரிகத் தொட்டில் அரிக்கமேடு. கி.மு.500 முதல் கி.பி.500 வரையிலான காலக்கட்டத்தில் தமிழர் அணிந்த அணிகலன்களையும் பயன்படுத்திய பிற பொருள்களையும் பட்டியலிட்டுக் காட்டுகிறது அய்யப்பன் நிகழ்த்திய புதைபொருள் ஆய்வு என்று கட்டுரை ஆசிரியர் சுட்டிச் செல்கிறார்.

கலித்தொகைப் பாடல் காட்சியை ஒரு நாடகக் காட்சியாய்க் கண் முன் நிறுத்தும் வகையில் அமைந்த கட்டுரை யாதும் வினவல்

எனுந் தலைப்பினது. அவ்வை சு.துரைசாமிப் பிள்ளை பாடற்கருத்தினை விளக்க எளிய நடையில் பின்னணியைக் காட்டுகிறார். பின் தலைவி தோழி என்றிட்டு உரையாடல் வழிப் பாடற்பொருளைப் புலப்படுத்துவது சங்க நூலைப் படிப்போர் உள்ளத்தில் பதியத் துணையாகும்.

புறநானூற்றில் ஒரு வியத்தகு செய்தி என்ற இலக்கியக் கட்டுரையை எழுதியவர் கா.பொ. இரத்தினம். "எட்டுத்தொகை, பத்துப் பாட்டு முதலிய சங்க நூல்களிற் பெரும்பாலும் உண்மையான நிகழ்ச்சி களும். இயற்கையோடும் இசைந்த செய்திகளுமே கூறப்பட்டுள்ளன" பிற்கால நூல்களில் வியத்தகு செய்திகள் மிகுதி. புறநானூற்றிலும் அத்தகு செய்தி வந்துள்ளதாகக் காட்டுகிறார். இயற்கை இகந்ததை வியத்தகு செய்தி எனக் கட்டுரையாசிரியர் குறிக்கின்றார். வடக்கிருந்து இறந்த செய்தியை இதனுள் அடக்குகிறார்.

மண்ணுள் மறைந்த மாநகரத்தில் அரிக்கமேடு பற்றி ஒருவர் எழுதியதும் இராசமாணிக்கம் திரிபுவனை மாதேவிச் சதுர்வேதி மங்கலம் குறித்து எழுதியுள்ளார். இது கோயில் ஆய்வர்க்குப் பயன்படும்.

வள்ளுவர் குறளமுதும், கம்பர் சித்திரக் கரும்பும் என்ற தலைப்பில் கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியன் எழுதியுள்ளார். கட்டுரைத் தலைப்பில் உருவக அமைப்பு உள்ளது. அதற்குரிய காரண விளக்கமே கட்டுரை. முழுமையும் உண்மை அமிழ்து. கரும்பின் சக்கை உண்டு அதனால் சாறு மட்டுமே. "அமுதத்தை வாரி உண்ண உண்ண அதன் சுவை குற்றாததுமன்றிச் சுவையற்ற பாகமெனத் தள்ளப்படும் பகுதி அதனிலிருக்க மாட்டாது. ஆயின் கரும்பைச் சுவைத்துச் சுவைத்துச் சக்கையை உமிழ நேரிடுகின்றது."

சங்க காலச் செய்யுள் நடையை மூவகையாகப் பகுத்து ஆய்வு செய்யும் கட்டுரையாக அமைவது சங்க காலச் செய்யுள் நடையாகும். (சிலம்பு 36, ப.25) செய்யுளைப் பாட்டுடைச் செய்யுள், உரைச் செய்யுள், சூத்திரச் செய்யுள் என மூவகையுள் அடக்குகிறார் கட்டுரையாசிரியர். வடமொழியில் காவியம் என்ற சொல், ஆங்கிலத்தில் Epic என்ற சொல் ஆகியவற்றில் பொருள் விளக்கம் தரப்படுகிறது. தமிழில் செய்யுள் இவைகளினின்று வேறுபடுந் தன்மை விளக்கப்படுகிறது.

நெடுநல்வாடை திணையாராய்ச்சி மறுப்புக்குத் தடை என்ற கட்டுரை ஒரு தொடர் கட்டுரையே (சிலம்பு 41, பக். 257-262) கட்டுரையாசிரியர் தம் கொள்கையை நிலை நாட்டிய பின்

அண்ணாமலை, சென்னைப் பல்கலைக் கழக ஆய்வுத்துறைகள் ஆய்ந்து முடிவு கட்டி நிலை நாட்டல் அவசியம் என்று முடிவில் கூறுவது ஆராய்ச்சியாளனின் பண்பைக் காட்டுகிறார். வாதப் பிரதிவாதங்களுக்கு பதில் அளித்த பின் மேலாய்வாளர்க்கும் இடந்தரும் பெருந்தன்மை கட்டுரையாளர் தி. சங்குப் புலவருக்கு இருந்துள்ளது.

சங்க இலக்கியங்களை உரைநடை வடிவில் வாசகர்க்கு அறிமுகப் படுத்திய இதழ் செந்தமிழ்ச் செல்வி.

சங்க இலக்கிய ஆய்வுச் சிந்தனையைத் தூண்டும் வகையில் அறிஞர் பலர் கட்டுரைகள் எழுதியுள்ளனர். ஊர்ப்பெயராய்விற்கு அடிகோலும் கட்டுரையும் உண்டு.

அகநானூற்றில் தாளம்பற்றிய குறிப்பு வந்துள்ளது என்பதை இசைப் பேரறிஞர் எடுத்துக் காட்டியுள்ளார்.

பயிரினம் பற்றிய புதிய செய்தியினைப் பி.எல்.சாமி விளக்கியுள்ளார். உயிரினச் செய்திகளைத் தொகுத்துத் தந்துள்ளார்.

சங்க நூல்களைப் படிக்காதவர், படிக்க இயலாதவர் தொடர்ந்து படித்து வந்தால் புலவராகிவிடலாம் என்ற அளவிற்குத் தமிழ் நாட்டில் நீண்ட காலமாக ஓரிதழ் இயங்கி வருகிறதென்றால் அது செந்தமிழ்ச் செல்வியேயாகும்.

திருநெல்வேலி இந்துக் கல்லூரி இதழில் வெளிவந்து 18ஆவது சிலம்பில் சேர்க்கப் பெற்ற கட்டுரை தமிழ்மொழியின் தற்காலப் போக்கு என்பதாகும். இக்கட்டுரையாசிரியர் பி.கே. அருணாசலக் கவுண்டர். “பழங்காவியங்களிலும் சங்க நூல்களிலும் பொருள் உணர்ச்சி இன்றியே புகுந்துழன்று இலக்கணக் கடலின் கரை காண மாட்டாது தடுமாறும் தமிழ் மாணவர் நிலை இரங்கத்தக்கது” (18, ப.205) என்று 1940-41இல் குறிப்பிட்டுள்ளார். இலக்கண வரம்பு இகந்து எழுதித் தமிழைப் புறக்கணித்துவரும் நிலை நாற்பதுகளில் உருவாகிவிட்டது என்பதனைக் கல்லூரிப் பேராசிரியர் அன்றே குறிப்பிட்டுள்ளார். பத்திரிகைத் தமிழ் குறித்தும் விளக்கமாக எழுதித் தமிழின் பண்பைப் பாதுகாத்தல் தமிழர் கடமை என்று வலியுறுத்துகிறார். மஞ்சரி பின்பற்றும் முறையை, இங்குச் செந்தமிழ்ச் செல்வி கையாள்கிறது. தம் கருத்துக்கு ஒத்து

வருவதும் பொது மக்களுக்குத் தேவைப்படுவதுமான கட்டுரைகள் ஏற்கனவே வெளி வந்திருப்பினும் அதனைத் தம் இதழில் தொகுப்பது மஞ்சரி இதழின் பண்பாகும்.

கம்ப நாடரும் உடன்பிறப்பு நோக்கத்தின் உண்மையும் என்ற நீண்ட தொடரில் அமைந்த தலைப்புடைய கட்டுரையை எஸ்.ஆறுமுக முதலியார் எழுதியுள்ளார். புறநானூறு, திருக்குறள் ஆகிய நூல்களினின்றும் ஏற்புடைய கருத்துக்களை விளக்கிய பின் கம்பரின் நோக்கத்தை விளக்குகிறார். "இவ்வுடன்பிறப்பு நோக்கம், ஓரிடம் இரண்டிடங்கள், ஒரு படலம் இரண்டு படலங்கள், அல்லது ஒரு காண்டம் இரண்டு காண்டங்களில் மட்டுமின்றி, பாலகாண்டம் தொடங்கி, யுத்த காண்ட மீறாக, நூல் முழுவதும் பரந்து விரிந்திருக்கின்றது" (18, 329) என்று கூறியுள்ளார்.

இலக்கிய நூல்களில் அமைதி என்ற தலைப்பில் இளவழகனார் எழுதிய கட்டுரையில் இலக்கணத்தைக் கலை என்றும் இலக்கியத்தை இன்கலை என்றும் அழைக்கின்றார். ஐவகைப் புலன்களாலும், ஏனை அகக் கருவிகளாலும், அவற்றிற்கும் அப்பாற்பட்ட உயிருணர்வாலும், அவ்வுணர் வழிந்து நின்ற ஒரு நிலையான உணர்வரிய உணவாலும் நுகரப்படும் இனிமைகள் எண்ணென்ன உண்டோ அவையெல்லாம் இலக்கியங்களேயாம் (17 பக்.519) என்று இலக்கியத்தை வரையறை செய்கிறார். இலக்கியம் என்ற சொல்லுக்கு எண்ணம், நோக்கம், குறி எனும் பொருள் இருத்தலின் உயிர்களின் எண்ணமாய் நோக்கமாய், குறியாய் இருப்பன இலக்கியங்களே என்பது இவர் கருத்தாகும்.

இலக்கிய விளக்கம் தரும் கட்டுரையாசிரியர்கள் அவரவர் அறிவுத் திறனுக்கு ஏற்பக் கட்டுரைகள் எழுதியிருப்பினும் சில பொதுக்கூறு களால் படிப்பவர் ஏற்கும் வண்ணம் உள்ளது. இதழாசிரியர் கட்டுரை யாளர்களுக்குத் தத்தம் சிந்தனையின்படிச் செயல்பட உரிமை அளித் துள்ளமை பாராட்டற்குரியது.

சங்க இலக்கியத்தில் கடல்வாழ் விலங்குகள் குறித்து பி.எல்.சாமி ஆராய்ந்து கூறியுள்ளார். (சிலம்பு 43, பக்கம் 65-73) நற்றிணை 219, 239ஆம் பாடல்களில் வரும் பெருமீன் திமிங்கிலமாக இருக்கலாம் என்றும், அகநானூறு 210ஆம் பாடலில் காணப்படும் ஏமுறுபெருமீன் நீலநிறத் திமிங்கிலம் என்றும் முடிவு கூறுகிறார். ஒருவகைத் திமிங்கிலத்தை மதுரைக் காஞ்சி பனைமீன் என்று குறிப்பிடுகிறது.

இப்பனைமீன் பற்றிய செய்தி கம்பராமாயணத்திலும் இடம் பெறுகிறது (யு.69) தக்க யாகப் பரணியில் வரும் மோங்கில் என்பது ஓங்கில் ஆகும் விலங்கு நூலும் இலக்கியங்களும் கற்று இணைத்துப் பார்த்து முடிவு கூறும் ஆய்வுக் கட்டுரை பி.எல். சாமியுடையதாகும். ஊர்வன, நீர்வாழ்வன, பறவைகள் காட்டு விலங்குகள் பற்றிய குறிப்புகளைக் கொண்டுத் தமிழ் இலக்கியங்களில் உயிரினம் பற்றி ஆய்வு செய்து பல கட்டுரைகள் இவர் எழுதியுள்ளார். இலக்கியத்திச் சுவை மட்டுமே கருதிக் கற்பார் இச்செய்திகளையும் இணைத்துப் படிக்கும் போது வியப்பெய்தும் வண்ணம் இவ்வாய்வுக் கட்டுரைகள் அமைந்துள்ளன.

இணைப்பாய்வு (Interdisciplinary) செய்வதற்கு ஏற்ப பி.எல். சாமி கட்டுரைகள் உள்ளன.

இலக்கியங்களில் அறிவியல் கருத்துக்களிருப்பதை இக்கட்டுரை யாளர் எடுத்துக்காட்டியுள்ளார். இ.அ.ப. வில் பணிபுரிந்த இவருக்குச் சங்க இலக்கியக் கல்வி எத்தகைய சிந்தனையைத் தூண்டியுள்ளது என உன்னுந்தோறும் வியப்பளிக்கிறது.

பத்துப்பாட்டு - தமிழர்களின் பண்பாட்டு நூல். மன்னர்களின் கொடை, வீரம், இரக்கம், நாடுகாவல், நாட்டுவளம் பெருக்கல் முதலியவற்றைக் காட்டும் கலங்கரை விளக்கம் என்று வீ.ப.கா. சுந்தரம் கூறுகிறார் (சிலம்பு 46, பக்கம் 437). இப்பாடல்களைப் பாடியவர்களையும் புரவலர்களையும் மனனம் செய்து கொள்ள ஒரு பாடலையும் அவர் தந்துள்ளார்.

ஆறுபடை வீடுபுகழ்ந் தார்முருகில் கீரனுர்
    ஆளுங்கரி காலைப்பொரு நாற்றில்முடிகண்ணினார்
கூறுசிறு பாணில் அருட்கோடனைநத் தத்தனுர்
    கூர்ஒலி கடாம் நன்னனைக் கோரும்பெரும்கௌசிகர்
வேறுபெரும் பாண் திரையை வேட்டுதிரங் கண்ணரே
    வேந்துதிரு மாவளவனைப் பாலையிலும் பாடினார்
நாறுபெரும் முல்லைதனை நாட்டினர்நப் பூதனார்
    நற்கபிலனார் குறிஞ்சி ஆரியனுக் கோதினார்
மாறுவெல்லும் நீள்செழியை மாங்குடியர் காஞ்சியில்
    மண்ணீனர்நக் கீரருந்தம் மாநெடுநல் வாடையில்
வீறுகொண்ட வீரம்அளி பண்பாட்டுப் பத்துமே
    விள்ளரிய தெள்ளுதமிழ் அள்ளும்ஒளி முற்றுமே

(சிலம்பு 6 பக்கம் 437-438)

இப்பாடலை மாணவர்கள் மனப்பாடம் செய்தால் பயன் உண்டு என்று கட்டுரையாசிரியர் கூறியுள்ளார்.

'முருகு பொருநாறு; 'நற்றிணை நல்ல குறுந்தொகை. . .' என்ற பழம்பாடல்களைத் தமிழ்ப் புலவர் அறிவர். மேற்கண்ட பாடலையும் படித்துவிட்டால் புலவர்களையும் மனத்தில் பதிக்க வாய்ப்பு உள்ளது. இப்படி ஒரு பாடல் இருப்பதைச் செந்தமிழ்ச் செல்வியால் தான் அறிய முடிகிறது.

# காப்பிய இலக்கியப்பணி

எது இலக்கியம் என்ற வினாவிற்கு விடை தரும் வகையில் திரு.மா. பாலசுப்பிரமணிய முதலியார் எம்.எ. 'இலக்கியப் பயிற்சி' என்ற தமது கட்டுரையில் விளக்குகிறார். "சுருங்கக் கூறுமிடத்து, வாழ்க்கையின் வழிகளை மொழியின் வாயிலாக விளக்குவதே இலக்கியம் என்பது பொருந்தும்" (சிலம்பு 18, பக்கம் 419). மாந்தர் யாவர்க்கும் பொதுவான ஒரு பொருளை உள்ளடக்கமாக் கொண்டிலங்கும் இலக்கியம் அழகுடையதாக இன்பம் தரும் வகையில் அமைவது அதன் இயல்பாகும். தன்மை, மன்பதை, இனத்தொடர்பு, புறவுலக இலக்கியம், இலக்கிய இலக்கியம் என இலக்கியத்தை ஐவகையாக வகுக்கிறார். இலக்கிய ஆக்கத்திற்குரிய உறுப்புக்களை இயற்கை, செயற்கை எனப் பகுக்கிறார். இலக்கிய மதிப்புக் குறித்து "ஓர் இலக்கியத்தின் மதிப்பு அதை ஆக்கியோனது உண்மை நவிற்சியைச் சார்ந்து நிற்கும். அவ்வுண்மை நவிற்சி இல்லாதது. இலக்கியமாகாது." (சிலம்பு 18. ப.421) உலகியலறிவு விரிய இலக்கியங்கள் பல கற்க வேண்டும். இலக்கியப் பயிற்சி வாயிலாகப் படைப்போனை உணர முடியும். ஒப்பிலக்கியக் கல்வி இலக்கியச் சிறப்பினை அறிய உதவும் நடை வழி ஆசிரியனை இனம் காண முடியும் எனப் பல கருத்துகளைக் கொண்ட விளக்கு முறைக் கட்டுரையாக இலக்கியப் பயிற்சி அமைகிறது. தமிழ்க் காப்பியங்கள் பற்றிய கட்டுரைகள் வாசகர்க்கு இலக்கியப் பயிற்சியை அளிக்கின்றன.

சிலப்பதிகாரம் - மணிமேகலை என்ற தலைப்பில் ஓர் ஒப்பாய்வே நிகழ்சின்றதை 18ஆம் சிலம்பில் காண முடிகிறது. 54 கருத்துக்களையும் எண்ணிட்டு, ஒரு கருத்துக்கு ஒருபத்தி என்ற முறையில் இக்கட்டுரை அமைந்துள்ளது. இரட்டைக் காப்பியங்களில் காணப் பெறும் ஒற்றுமை, வேற்றுமைகளைச் சான்றுகளின்றிக் கருத்தளவில் விரித்துரைக்கும் பாங்கில் வித்துவான் அ.கிருட்டிணமூர்த்தி இதனை எழுதியுள்ளார். உரை விளங்காப் பகுதி இரண்டிலும் இருப்பதை இவ்வாறு குறிப்பிடுகிறார். "மணிமேகலையில் தவத்திறம் பூண்டு, தருமங் கேட்ட காதைக்கும் (29ஆம் காதை) உரை விளங்கவில்லை. அது போல, சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதைக்கு உரை தெரியவில்லை." (சிலம்பு 18, ப.378) இரண்டில் எது அழகு? இருபெரும்புலவரில் யார் புலமையில் விஞ்சியவர்? என்றெல்லாம் ஆய்ந்து கருத்துக் கூறியுள்ளார்.

'சிலப்பதிகாரமும் அவலச் சுவையும்' என்ற கட்டுரையைக் கோட்டாறு தே.ப. பெருமாள் எழுதியுள்ளார். உள்ளத்தைத் தன் வயமாக்கும் கவிதைகளே இளங்கோவின் கவிதைகள். இவை உணர்ச்சியின் உயர்ந்த எல்லையைக் காட்டுவன. எண் சுவைகளில் உவகை, அவலம், பெருமிதம் (வீரம்) ஆகிய முச்சுவைகளே விஞ்சியுள்ளன. புகார்க் காண்டம் உவகை எனில் மதுரை அவலமாகும். வஞ்சி வீரச் சுவையுடையதாகும் எனப் பகுத்துக் கூறி அவலச் சுவையை விளக்குகிறார்.

மணிமேகலை என்ற தலைப்பில் பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியார் எழுதிய கட்டுரை அறச் செல்வியின் மேன்மையை எடுத்துரைக்கின்றது. "அறிவு வளர்ச்சியடைதற்கு அயல் நாட்டு யாத்திரை பெரிதும் உதவியாகுமென்றும் உண்மையையும் இவ்வம்மை சரிதம் புலப்படுத்துவதாகும்" (சிலம்பு 18, ப.444) என்று மணிமேகலை சாவகனாடு இலங்கை முதலிய அயல்நாட்டு யாத்திரை குறித்துக் கருத்துக் கூறியுள்ளார்.

கண்ணகி திருமணம் மங்கல வாழ்த்துப் பாடலின் விளக்கக் கட்டுரை யாயினும் திங்களைப் போற்றுதும் எனத் தொடங்கிய இளங்கோவின் நோக்கம் பற்றிய ஆய்வு அடங்கியுள்ளது.

'தமிழ் இலக்கியமும் மதிப்பீடும்' என்ற தலைப்பில் தமிழ் இலக்கியத் திறனாய்வுக் கருத்துக்களைத் தந்திருப்பவர் வித்துவான் ஆ.கிருட்டிணமூர்த்தியாவார். Criticism என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இவர் தரும் பொருள் மதிப்பீடாகும். இன்று விமர்சனம் என்னும் திறனாய்வு என்றும் குறிக்கப் பெறுகின்றது. உரையாசிரியர்கள் திறனாய்வாளர்கள் என்னும் கருத்தை நிலை நாட்டுகிறார். "முற்கால உரையாசிரியர்களுள் கருத்துக்களைச் சீர்தூக்கும் மதிப்பாரில் (Critics) நச்சினார்க்கினியர், தலைமையாசிரியர் பிற்காலத்தவருள் ஆசிரியர் சிவஞான முனிவராவார்" (சிலம்பு 17 பக்கம் 534) அன்று முதல் இன்று வரை நூல்களை மதிப்பிடும் முறை இருந்திருக்கின்றது என்பதற்குச் சான்றுகள் காட்டியுள்ளார்.

"சிலப்பதிகாரத்தின் உட்கோளாகிய பத்தினித் தெய்வம் வஞ்சிக் காண்டத்தின் இறுதியில்தான் மலர்ப்பலியும் வாழ்த்தும் பெற்று வரம் தருகின்றது. சிலப்பதிகாரமும் முழுமை பெறுகின்றது" என்று வஞ்சிக் காண்டத்தின் தேவைக்கு விளக்கம் தருகிறார் அறிஞர் வை.தட்சிணா மூர்த்தி (சிலம்பு 32, பக்.207)

தேவந்தி குறித்து "கண்ணகியாரின் கற்பொழுக்கத்தைத் தெய்வந் தொழாது கணவனைத் தொழுதெழும் மாண்பினை அறிய உரைகல் ஆயினாள் இவள்" என்று திரு.ஆ. சிவலிங்கனார் கூறுவதும் சிலப்பதிகார மாந்தர் பற்றிய மதிப்பீடே (சிலம்பு 33 ப.95).

பதினாலாம் சிலம்பில் 'கானல்வரி' என்ற கட்டுரை வெளி வந்துள்ளது. கட்டுரை முழுதும் சிலப்பதிகாரப் பாடல்களின் விளக்கமே.

'கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும்' என்ற ஒப்பாய்வுக் கட்டுரை செ.செ.13, 14 சிலம்புகளில் தொடர் கட்டுரையாக வெளிவந்துள்ளது. ஆராய்ச்சிப் பகுதி என்ற தலைப்பின் கீழ் அமைந்த இக் கட்டுரையில் வால்மீகியிலிருந்து கம்பன் வேறுபடுமிடங்கள் விளக்கப்படுகின்றன.

"கம்பராமன் அசாத்திய குணராமனாகக் கம்பனால் புளுகப் பெற்றான் என்பது ஊன்றிண்டி ராமனைக் கம்பன் சைவராமனாக்கியது மாத்திரமா? வால்மீகி வாய்மை தவறாது வரைந்த இயற்கை குணங்களுடைத்தாயிருந்த சாத்திய ராமனைக் கம்பன் புளுகில் செயற்கை யெல்லையையுங் கடந்த அசாத்திய ராமாக்கினான்" என்று கூறி இரண்டொன்று எடுத்துக் காட்டுகள் இயம்புகின்றார் (சிலம்பு 14 ப.11).

தமிழ் இலக்கியங்களிற் காணப்படும் இசைப்பகுதிகள் குறித்து ஆசிரியர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் எழுதிய கட்டுரை (சிலம்பு 17, பக். 169-173) தமிழர் பண்டுதொட்டு இசையை எவ்வாறு போற்றி வளர்த்தனர் என்பதற்குச் சிலப்பதிகாரம், பெரியபுராணம், கம்பராமாயணப் பகுதிகளிலிருந்து சான்றுகள் காட்டி விளக்குகிறார்.

மா.இராசமாணிக்கனார் எழுதிய 'பண்டைத் தமிழர் நெறி' எளிய உரைநடையில் நானில வருணனையை எடுத்துக் காட்டும்.

'காப்பியத்துறைத் தெளிவு' என்ற கட்டுரை தொல்காப்பியத் தெளிவாகும். புலவர் மரபு குறித்து விளக்குகிறார். புலவர்கள் தஞ்செயல்களில் கொண்ட முடிவு, மறை (இரகசியம்) உறுதி, மேலான பழக்க முறை (ஆசாரம்) வழக்குமுறை (சம்பிரதாயம்) குறிப்பு எனுமிவை யடங்கியது ஈண்டுப் புலவர் மரபு எனப்படுகின்றது (சிலம்பு 18, பக்.39) வடநூலார் கவிசமயம் என்று புலவர் மரபைக் குறிப்பர். இனம், பொருள், பண்பு, தொழில் எனும் நான்கு வகையில் கவிசமயம் அமையும். இவ்வட நூல் கருத்தைத் தொல்காப்பியர் கூறும் மரபுடன் ஒப்பாய்வு செய்கிறார் கட்டுரையாசிரியர்.

'எந்தச் சிலம்பு' என்ற சிலப்பதிகார ஆய்வுக் கட்டுரையை எழுதிய பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் (சிலம்பு 47, பக்கம் 333) வ.சுப. மாணிக்கனாரின் கருத்தை அடியொற்றிச் சிறந்த ஆய்வுரை அதுதான் என்கிறார். சிலப்பதிகாரத்தின் பெயருக்கு எந்தச் சிலம்பு காரணம் ஆனது என்பதை மேலும் விளக்குகிறார். கண்ணகியின் சிலம்புகள் இரண்டு பாண்டிமாதேவியின் ஒற்றைச் சிலம்பு ஆக மூன்று சிலம்புகளில் எச் சிலம்பு சிலப்பதிகாரத்துக்குப் பெயர்க் காரணமாய் அமைந்தது என்பதைக் கட்டுரை ஆசிரியர் ஆராய்கிறார். கோயிற் சிலம்பாகிய அரசியின் சிலம்பே காப்பியத்தின் பெயர்க் காரணமாக அமைந்தது. மூன்று உண்மைக் கருத்துகளுக்கு மூன்று சிலம்புகளும் பொருத்தமாக அமைந்தன என்று கட்டுரையாசிரியர் கூறுகிறார்.

புலவர் திருமுதுகுன்றம் எழுதிய தனிக் கட்டுரை 'புதுமைப் பெண்ணும் கண்ணகியும்' என்பதாகும். (சிலம்பு 43, பக்.330-338) பாரதியின் புதுமைப் பெண் இயல்புகளுடன் சிலப்பதிகாரக் கண்ணகியின் இயல்பை ஒப்பிட்டாய்ந்துள்ளார். பாரதி காட்டும் புதுமைப் பெண் குடும்பப் பெண்ணே. அவள் காதலொருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினுங் கைகொடுத்து உதவுகின்ற கண்ணகி போன்ற பெண்ணே என்று நிறுவுகிறார்.

மாநாய்கனும் மாசாத்துவானும் என்ற மயிலை சீனி. வேங்கடசாமியின் கட்டுரை ஒரு பெயராய்வுக் கட்டுரையாகும். (சிலம்பு 46, பக்.17-23) இவை சொந்தப் பெயர்கள் அல்ல. சிறப்புப் பெயர்களே என்று நிறுவியுள்ளார். இவர் தமது 'சிலப்பதிகார ஆய்வுரை' என்ற மற்றொரு கட்டுரையில் வையாபுரியார் கால ஆய்வுக் கருத்தை மறுத்துள்ளார். கானல் வரியில் வரும் காவேரி, காவிரி எனுஞ் சொற்களைக் கொண்டு சிலப்பதிகாரம் பிற்காலத்திய நூல் என்று பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் கூறியதை மயிலை சீனி வேங்கடசாமி அது மேலோட்டமான ஆய்வு என்று விமர்சனம் செய்கிறார் (சிலம்பு 43, பக்.85-93).

சிலப்பதிகாரம் என்ற பெயர்க் காரணத்தைச் சிலம்பு எனும் அணி காரணமாக அமைந்தது எனக் கூறுவது நீண்ட கால வழக்கு. ஒலி காரணமாக வளர்ந்த வரலாறு என்று கூறுவதுதான் சரி எனக் கூறுகிறார் அறிஞர் சொ.சிங்காரவேலனார் (சிலம்பு 46, பக்.674-679)

சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத்தில் தென்படும் ஆய்ச்சியர் குரவையை இங்கு முடிந்த அளவில் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம் என்று ஆய்வு நெறிமுறைப்படி ஆய்ச்சியர் குரவை எனும்

ஆய்வுக் கட்டுரை சிலம்பு 36இல் வெளி வந்துள்ளது. குரவை எனும் சொல்லாய்வு (சிலம்பு 36, பக்.30) முதற்கண் இடம் பெறுகிறது. "குரவை என்பது 'குர்' என்ற வொலிக்குறிப்பினைப் பொருளாய்க் கொண்ட முதனிலையடியாய்ப் பிறந்த பெயர். இது முதலிற் பெண்கள் தம் நாவினையும் இதழ்களையும் குவித்தொலிக்குஞ் செயலொன்றிற்குப் பெயராயிருந்தது. அப்பெயர் இப்பொழுது தென்னாட்டில் 'குலவை' என வழங்கி வருகின்றது. பின்பு, குரல்களாகிப் பாட்டினைப் படிப்பவர் கூடியாடுங் கூத்தினுக்குப் பெயராய் மாறியது ஆதலின் ஆய்ச்சியர் குரவை என்பது முல்லை நிலப் பெண்கள் பலர் கூடிப் பாட்டுக்கள் பாடி யாடுங் கூத்தாம்' (சிலம்பு 36 ப.29) என்று கட்டுரையாளர் விளக்கியுள்ளார்.

சீவக சிந்தாமணியின் இடம் பெறும் திருக்குறள் கருத்துகளுக்குப் பல சான்றுகள் காட்டலாமெனினும் கட்டுரையாசிரியர் அ.அருளம்பலம் காட்டிய இரு சான்றுகளைச் சுட்டலாம்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்' (குறள் 10) என்பது சீவகசிந்தாமணியில்,

தொல்லைநம் பிறவியெண்ணிற் றொடுகடல் மணலுமாற்றா
வெல்லைய வற்றுளெல்லா மேதிலம் பிறந்துநீங்கி" (1:241)

என்ற அடிகளில் அமைந்துள்ளது.

அமைச்சரின் கடமையை வள்ளுவர்,

"அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்" (குறள் 638)

என்கிறார். இக்கருத்து சீவகசிந்தாமணியில்,

"மூரித்தேன் தாரினாய் நீ முனியினும் உறுதிநோக்கிப்
பாரித்தேன் தரும நுண்ணூல் வழக்கு அது ஆதல் கண்டேன்"
(1:185)

என வந்துள்ளது. கட்டுரையாசிரியர் எடுத்துக் கொண்ட பக்க அளவிற்குத் தக்கபடிச் சில குறட்பாக்களையே சான்றுகளாகக் காட்டுகிறார்.

கம்பராமாயணத்தில் காணப்பெறும் திருக்குறட் கருத்துக்களைப் பற்றி அ.மகாலிங்கம், சு.அருளம்பலம் ஆகிய இருவரும் கட்டுரைகள் எழுதியுள்ளனர். முதலாமவர் கம்பனும் வள்ளுவனும் (சிலம்பு 23, பக்கம் 441-446) என்ற தலைப்பிலும், இரண்டாமவர் கம்பரும் வள்ளுவரும் (சிலம்பு 14, பக்கம் 451-455, 537-543) என்ற தலைப்பிலும் எழுதியுள்ளனர். கட்டுரைகளில் முன்னது தனிக்கட்டுரை, பின்னது தொடர் கட்டுரையாகும். இருவரும் ஒரே தலைப்பைத் தேர்ந்தெடுத்திருப்பினும் கட்டுரை அமைப்பிலும் கருத்துகளிலும் மிகுந்த வேறுபாடு உள்ளது.

"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனுமில"( குறள் 1100

என்ற குறட் கருத்து, கம்பராமாயணத்தில், இராமபிரான் கன்னி மாடத்தில் சீதையைக் கண்டதும் இருவர் கண்களும் ஒன்றையொன்று கவ்வி இருவர் மனத்தும் இன்ப எண்ணங்கள் நிகழ்ந்தன (பாலகாண்டம் மிதிலைக் காட்டிச் படலம், பா.98) என்ற நிகழ்ச்சியின் போது வெளிப் படுகிறது.

'ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக்கெடும்' (குறள் 763) என்ற குறட் கருத்து கம்பராமாயணத்தில் குகன் கூற்றில்,

'எலிஎலாம் இப்படை அரவம் யான்எனா
ஒலியுலாம் சேனையை உவந்து கூயினான்' (குகப்படலம் பா.10) என அமைந்துள்ளது

கட்டுரையாசிரியர் சு.அருளம்பலம் கம்பராமாயணத்தில் வேறு நிகழ்ச்சிகளைத் தேர்ந்து, குறட் கருத்துகளைப் பொருத்திக் காட்டுகிறார்.

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு" (குறள் 215)

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்" (குறள் 216)

ஆகிய குறட்பாக்களின் கருத்தைக் கம்பர் அமைச்சர் பேசும் "பல்லோர் விரும்ப உண்டு மகிழும் ஊர் நடுவேயமைந்த ஊருணியை யாரேனும்

வெறுப்பார்களா? கனிகள் தருகின்ற பயன்மிகு மரத்தினை வெறுப்பதும் இன்று, நீரின்றி வறண்ட நதியில் வெள்ளம் மிக்கு ஓடுவதையும் வெறுப்பார்களில்லை. எனவே, உண்ணும் நீரினும் உயிரினும் மேம்பட்டோரான இராமன் எங்கள் மன்னனாவதை மனதார ஏற்கிறோம்" என்ற கூற்றில் அமைத்துள்ளார்.

வெவ்வேறு ஊர்களிலிருந்து வேறுவேறு காலங்களில் கட்டுரையாசிரியர்கள் இதழுக்கு ஒரே தலைப்பில் எழுத நேரினும் முற்றிலும் வேறான கட்டுரை அளிக்க முடியும் என்பதற்குச் சான்றாக இவ்விருவர் கட்டுரைகள் உள.

வேங்கடசாமி சுந்தரர் தேவாரத்தில் அமைந்த குறட் கருத்துக்களை விளக்கியுள்ளார்.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார்" (குறள் 6)

இதனைச் சுந்தரர் செந்தமிழில்

'பொறிவாயி லிவ்வைந்தினை யவியப்
பொருதுன்னடி யேபுகுஞ் சூழல் சொல்லே' எனக் கூறுகிறார்.
தேவாரத்தில் திருக்குறள் என்பதே கட்டுரைத் தலைப்பாகும். (சிலம்பு 13, பக்கம் 451-453).

நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் திருக்குறள் அமைந்துள்ளதைத் 'திருக்குறளும் திருவாய்மொழியும்' (சிலம்பு 31, பக்கம் 579-582) என்ற தலைப்பில் ஆதிநாத பிள்ளை கட்டுரை ஆக்கியுள்ளார்.

"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக்கெடும்" (குறள் 134)

என்ற குறட் கருத்தை நம்மாழ்வார்,

"ஓதுவார் ஒத்தெல்லாம் எவ்வுலகத்து எவ்வெனயும்"

(திருவாய் 3.1.6) எனத் திருவாய்மொழியில் அமைத்துள்ளார்.

வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் குறட்பாக்களைக் கையாண்ட செய்தியைச் சான்றுகளுடன் விளக்குகிறார் எஸ்.கணபதி (சிலம்பு 10 பக்கம் 65-69)

'கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று' (குறள் 332)

என்பதைத் திருவருட்பாவில்,

'கூத்தாட்டவை சேர்குழாம் விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறட்மொழியுந் தேர்ந் திலையே" (நெஞ்சறிவுறுத்தல் செய்யுள் 441) வள்ளலார் அப்படியே பின்பற்றியுள்ளார்.

குறட் கருத்துக்களும் சொற்றொடர்களும் இலக்கியங்கள் தோறும் இடம் பெற்றுள்ளன. இதனை நோக்கப் புலவரிடையே குறள் செல்வாக்குப் பெற்றிருப்பதை உணர முடிகின்றது. பத்திரிகையைப் படிப்போர்க்கும் இரு வேறு இலக்கியங்களை ஒரே நேரத்தில் படிக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. ஒப்பாய்வு வளர்ச்சிக்கும் துணையாகிறது. காப்பியப் புலவர் போன்றே இவர்களும் குறளைக் கையாண்டனர்.

கம்பன் காவியச் சுவை அமைப்பு என்ற தொடர் கட்டுரை (சிலம்பு 8, ப.276) கம்பரின் கவிதைக் கோட்பாட்டினைப் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. "கம்பர் ஓர் இயற்கை நிகழ்ச்சியைப் புனைந்து கூறி முடித்தற்கும் பிற கவிகள் அங்ஙனம் முடிப்பதற்கும் வேறுபாடுண்டு. சிற்சில வகையாய் புனைந்து கொண்டே போய் அதனை முடிக்குமிடத்தே கற்போர் உள்ளம் துள்ளிக் குதித்துக் கழிபேருவண்பூத்து நகைமுகம் தோன்ற மிக வியப்புடையதொன்றைக் கூறி முடிப்பது இவர் கொண்ட கோட்பாடு" ஆரண்ய காண்டத்தில் வரும் நிகழ்ச்சியைக் கட்டுரையாசிரியர் விளக்குகிறார். இராவணன் சூர்ப்ப நங்கை மூலம் சீதையின் பேரழகைக் கேட்டான். காமம் கொண்டான். சூரியனைப் போக்கிச் சந்திரனை வரவழைத்தான். அதனால் காமம் மிகுதியாகி விட்டது. மீண்டும் பகலை வரச் செய்தான். நள்ளிரவு காலையாக மாறியது. புதுப் பகலில் யாவரும் தூங்கிக் கொண்டிருந்தனர். பகலில் மலர வேண்டிய மலர்கள் இராவணனால் உண்டாக்கப் பட்டப் பகலில் மலரவில்லை என்ற செய்திகளைக் கூறி முடிக்கும்போது இராவணன் செய்த மாயச் செய்கையை யார் அறிவார் என்று வியப்புடன் முடிக்கிறார் கம்பர்.

"ஏவலின் வன்மையை ஏவலால் ஏற்றவர்,
நாவலர் இயற்றிய நாளிளும் நூற்
காவலின் இனிதுணர் அணித மாக்களுள்
கூறு கோழியுந் துயில்பு கொண்டவே (ஆண். மாரீச 129)

இவ்வண்ணம் பல இடங்களில் முதலிடம் எத்துணைத் தரமாக உயர்ந்த கருத்தோடு கம்பர் முடித்துள்ளார் என்பதற்கு ஏற்ற சான்றுகள் காட்டி விளக்கிக் கவிஞரின் கவிதைக் கோட்பாட்டினை எடுத்துக் காட்டுகிறார் கட்டுரையாளர்.

கானல் வரி காதல் போட்டியா? கலைப்போட்டியா? என்ற தலைப்பில் அமைந்த சிலப்பதிகார ஆய்வுக் கட்டுரை பட்டிமன்றத் தலைப்புப் போன்று உள்ளது. கொண்டல் சு.மகாதேவன் எழுதிய இக் கட்டுரை (சிலம்பு 49, ப.30) மாதவியின் வாழ்வியல் தொள்கையை விளக்குகிறது. கலை கலைக்காக என்பது மாதவியின் கொள்கையாகவும், கலை காதலுக்காக என்பது கோவலனின் கொள்கையாவும் அமைந்த நிலையை இவ்வாசிரியர் விளக்குகிறார். கலை மாதவியும், காதல் மாதவியுமாக இருவேறு மாதவியைக் காட்டுகிறார். கானல்வரி க்லைப் போட்டியேயன்றிக் காதல் போட்டியன்று என நிறுவுகிறார். உரை யாசிரியர்கள் காதல் போட்டி என்றே கருதினர்.

'இராமவதாரத்தில் பாவிகப் பண்பு' என்ற காப்பிய ஆய்வுக் கட்டுரையை சு.கா.சி. தனுக்கோடி எழுதியுள்ளார். (சிலம்பு 42, பக்.549-555) இது ஒரு தொடர் கட்டுரையாகும். பிறனில் விழைவோர் கிளையொடும் கெடும் என்ற கம்பரின் கருத்தை விளக்குகிறார்.

'மாண்புடைய மங்கையர் மூவர்' என்ற கட்டுரையும் இரட்டைக் காப்பியங்களை அடிப்படையாகக் கொண்டது. (சிலம்பு 41, பக்.209-216) அன்புக்கு மாதவி, அறத்துக்கு மணிமேகலை, வீரத்திற்குக் கண்ணகி என்று பண்பின் அடிப்படையில் பாத்திரங்களைப் பகுத்தாய்வு செய்கிறார் கட்டுரையாசிரியர் ஆ.கலியாணசுந்தரன்.

'கம்பரின் சிலப்பதிகார நினைவுகள்' என்று வித்துவான் செ.வேங்கடராமச் செட்டியாரின் கட்டுரை புதிய கோணத்தில் அமைந்த தொடர் கட்டுரையாகும். (சிலம்பு 45, பக்.177-183) கவிஞர்கள் இருவரின் கவிதைப் போக்கினையும் கற்பனை நயத்தினையும் உத்தி முறைகளையும் ஒப்பிட்டுக் காணும் நிலையில் அமைந்துள்ளது. சிலம்பைக் கம்பர் கற்றுத் தேர்ந்துள்ளார் என்று முடிவுகூறும் வகையில் கட்டுரை அமைந்துள்ளது.

கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் முடிந்ததும் கோவலன் கண்ணகியை,

"அளியதாமே சிறு பசுங்கிளியே
குடிலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின்
மழலைக் கிளைக்கு வருந்தின"

என்று பாராட்டுகிறான். கம்பராமாயணத்தில் இவ்வாறு இராமன் சீதையைப் பாராட்டும் இடம் வேறு எனினும் பாராட்டும் முறை ஒன்றுதான். சித்திரகூட மலைக் காட்சியைக் காட்டி மகிழ்விக்கும் நிலையில்,

'குழுவு துண்டொளை வேயினும் குறிநரம் பெறிவுற்று
எழுவு தண்டமிழ் யாழினுமினிய சொற்கிளியே'

என்று இராமன் சீதையை அழைக்கிறான். இது கோவலன் கண்ணகியின் மழலைச் சொல்லைப் பாராட்டியுள்ள பகுதியை நினைவிற் கொண்டு சீதையின் சொல்லினிமையை விளக்கும் விளி என்பது இவ்விரு பகுதியிலும் உள்ள கருத்து ஒற்றுமையால் புலனாகும் (சிலம்பு 45, பக். 177-178) இளங்கோ குழலும் யாழும் கூறியிருக்கக் கம்பர் சற்று விளக்கமாகப் பகுதியை அமைக்கிறார். அணிகலன்களுக்கு அழகை உண்டாக்க அழகி கண்ணகி மீது பணிப்பெண்டிர் அணிகலன்களைப் பூட்டினர் என்று இளங்கோ கூறியதை நினைந்து கம்பர் தம் காப்பியத்தில் சீதையின் பேரழகைச் சிறப்பிக்க அழகினுக்கு அழகு செய்தார் என்று குறிப்பிடுகின்றார். கண்ணகியின் மெல்லடிகள் பாலைவழி கடக்க வலிமை பெற்றுள்ளனவா என்று இளங்கோ அமைத்தது போலக் கம்பரும் சீதையின் மெல்லடிகள் காட்டு வழி செல்லும் தன்மை உடையனவோ என்று அமைக்கிறார். கோவலன் கூற்றை மனத்திற் கொண்டுதான் கம்பர் இவ்வாறு அமைத்தார் என்று கட்டுரை ஆசிரியர் கூறுகிறார்.

ஒப்பாய்வு செய்வார்க்கு உற்ற துணையாகும் புதிய சிந்தனையைத் தோற்றுவிக்கும் கட்டுரையாகும்.

பெரிய புராணச் செய்யுள் நடை குறித்த கட்டுரையைத் தொடர்ந்து எழுதியவர் பேராசிரியர் ச.கணபதி முதலியார்.

சொல்லமைப்பு நெறியில் சொற்களை வெளிப்படும் பொருளும் உள்ளுறையும் பொருளும் தோன்றும் வண்ணம் இருபொருள் படும்படி அமைக்குந்திறன் சேக்கிழாருக்கு உண்டு (32: ப.234) என்பதற்குக் கட்டுரையாசிரியர் பல சான்றுகள் தந்துள்ளார். சொல்லமைப்பு நெறியே நடையாகும். முரண் அமைப்பில் நயந் தோன்றச் சேக்கிழார்

பல பாடல்கள் இயற்றியுள்ளார். நீரோ பெரிய சிறுத்தொண்டர், 'சிறிய பெருந்தகையார் சம்பந்தர்' போன்ற சில சொற்களில் அமைந்த அடைமொழிகளைச் சான்றாக்கலாம். தொண்டர் தம் பெருமையைக் கூறும் சிவனடியார் வரலாற்று நூலில் அமங்கலச் சொற்கள் யாண்டும் வருதல் கூடாது என்பது சேக்கிழாரின் சொல் வைப்புநெறியில் தலையாயது (சிலம்பு 32, பக்கம் 236) என்ற கருத்திற்கும் பல எடுத்து காட்டுகள் தந்து விளக்கியுள்ளார்.

பெரிய புராணத்தில் தடுத்தாட் கொண்ட புராணத்தில் சுந்தரரின் காதற்பாட்டின் சுவையை ஒரு கட்டுரையில் விளக்குகிறார் திரு.கா.சுப்பிர மணிய பிள்ளை (சிலம்பு 32)

> "பேர் பரவை பெண்மையினில் பெரும்பரவை விரும்பல்குல்
> ஆர் பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
> சீர் பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
> ஏர் பரவை இடைப்பட்ட என் ஆசை எழு பரவை"
>
> தடுத். புரா.148

பெயர் பரவை என்பது பெண் தமன்மையிற் பெருமை பொருந்திய தேவர்க்குத் தெய்வமாகிய இரதி விரும்பும் உறுப்பாகிய அல்குலினது பரப்பு ஆதிசேடன் படம், அழகு விளங்குகின்ற முத்தைப் போன்ற பற்கள் (முல்லை) அரும்புகள், பரவைகள் என்பது தனக்குக் கூத்தாக வுடையவளாகிய (இந்த) இலக்குமியின் திருவுருவின் மெல்லிய சாயலினழகு (ஒரு) கடல் அதன் கண் விளைந்த எனது ஆசை எழுகடல் பெயரால் பரவை எனப்படுபவர். பெண் தன்மையால் விண்ணவர் கூட்டம் போற்றும் தெய்வமாதரால் புகழப்படும் தன்மை உடையவள் என்று கட்டுரையாசிரியர் விளக்கம் தருகிறார். சேக்கிழாரின் சொல் நயத்தைக் கட்டுரையாளர் விளக்க ஒரு பாடலைக் கொண்டே தெளிவுபடுத்துகிறார்.

குன்றத்தூர் சேக்கிழார் திருவவதாரஞ் செய்த இல்லம் பற்றிய ஆய்வுக் கட்டுரையைச் சாத்தூர் டி.எஸ்.கந்தசாமி முதலியார் எழுதியுள்ளார். புலவர் போற்றும் திறத்திலும், அவர்க்குச் செய்யும் கடன்களை இறுக்கும் திறத்திலும் மேனாட்டார் நம்மினும் பற்பல மடங்கு அறிவுடையர் எனுங் கருத்தை விளக்கியுள்ளார். (சிலம்பு 8 ப.212) தொண்டை நாட்டு வேளாளர்கள் கொண்டை கட்டிகள் என்ற செய்தியை விளக்கிச் சேக்கிழாரின் குலப்பெருமையைப் பேசுகின்றார்.

அறுபத்து மூன்று நாயன்மார் சரித்திரவுண்மை என்ற தொடர் கட்டுரையை எழுதியவர் திரு.அ.மு.சரவண முதலியார், கட்டுரை

அமைப்பு இன்றைய ஆய்வேடுகளில் காணும் போக்கில் உள்ளது. அறுபத்து மூன்று என்ற எண் சரியா என்று ஆராய்ந்து எழுதுகிறார்.

வாழ்க்கைத் துணையின் மாண்பு என்ற தலைப்பு வள்ளுவத்தில் அமைந்தாலும் பெரியபுராணம் கருத்தின் விளக்கமாக இக்கட்டுரை அமமகிறது. (சிலம்பு 36, ப.249)

பக்தி இலக்கிய அடிப்படையில் அமைந்த தேவாரத்தில் இயற்கைப் பொருள் நோக்குக் குறித்த கட்டுரையில் பாட்டின் செவ்வி பற்றிய விளக்கம் உள்ளது. "நூல், உரை முதலிய பலவகை இலக்கியங்களுள்ளும் பாட்டென்பது கற்ற அளவிலே மிகுந்த இன்பம் தருவதும் அஃது ஐம்பொறியுணர்விற்கும், ஆயுமறிவிற்கும் இனிமை தருவதோடு எல்லையில்லாதெழுகின்ற மக்கள் எண்ணத்தினையே மிக மகிழ்விக்குந்தன்மையுடையது. புனைந்து கூறலெனும் பொருள்நலம் விளங்குதலாலும் நல்லிசைப் பாவின் செவ்வி இனிது விளங்கும் (சிலம்பு 2 ப.151)

'பெரியபுராணத்தில் ஒரு சந்தேகம்' என்ற ஒரு பக்கக் கட்டுரையைத் தந்தவர் எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை. நூலாராய்ச்சிக்கு வித்திடும் கட்டுரையாகும். பெரியபுராணத்தில் நுண்கலைகள் என்ற கட்டுரையைத் தந்தவர் திரு.கு.நம்பியாகும் (சிலம்பு 41, பக்.296-300) இது ஒரு தொடர் கட்டுரையாகும். சேக்கிழார், வருணித்த கோயில்களை ஆய்வு செய்யும் போக்கில் அமைந்த ஆய்வுக் கட்டுரையாகும்.

தமிழ் இலக்கிய உலகத்தில் ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கியவர் அம்மையாரே ஆவர். சிறுபிரபந்தங்கள் தோன்றுவதற்கு வழிகாட்டியவர் காரைக்கால் அம்மையாரே அவர் அருளிய பக்தி இலக்கியங்களான திருவிரட்டை மனிமாலை, அற்புதத் திருவந்தாதி ஆகிய இரண்டும் பிற்காலத்தில் பிரபந்தங்கள் எழக் காரணமாயிருந்தன. கட்டளைக் கலித்துறை என்னும் ஒருவகை யாப்பைத் தமிழ் உலகத்துக்கு முதன் முதல் அறிமுகப்படுத்தியவர் அம்மையார்தான் என்று அம்மையார் திருமுறைமாட்சி என்ற கட்டுரையில் திரு.கா.சி. தனக்கோடி கூறுகிறார் (சிலம்பு 41, பக்.306-308).

சுந்தர மூர்த்தி நாயனார் சரித்திரத்தைத் தொடர் கட்டுரையாக்கி யுள்ளார். திரு.கா.சு.பிள்ளை (சிலம்பு 5 ப.3)

'அப்பர் மனை வாழ்க்கை' என்ற தலைப்பில் டாக்டர் சொ. சிங்கார வேலன் எழுதிய கட்டுரை (சிலம்பு 42, பக். 309-317) அப்பர் அடிகள் மணவாழ்க்கை மேற்கொண்டு செவ்விதின் வாழ்ந்தார் என்று

நிறுவு கிறார். பக்தி இலக்கியமான தேவாரத்தின் துணை வழி அப்பரின் மனை வாழ்க்கை விளக்கப்படுகிறது.

## சிற்றிலக்கியப் பணி

தமிழிலக்கியங்களைப் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என இருவகையாகப் பகுக்கலாம். சிற்றிலக்கியம் என்பது வடமொழியில் பிரபந்தம் என்றழைக்கப்படும். பந்தம் என்றால் கட்டுதல், இணைத்தல் என்பதாம். சொற்களால் சொற்றொடர்களையும், சொற்றொடர்களால் பாடல்களையும், பாடல்களால் நூல்களையும் இணைத்துக் கட்டும் போக்குடையது பிரபந்தம், இன்று இச்சொல் ஓரிலக்கிய வகையின் பெயராக அமைந்துவிட்டது. அளவாலும் பொருளாலும் சுருக்கத்தன்மை மிக்க இலக்கியங்களைத் தமிழில் சிற்றிலக்கியம் என்று கூறுவர். இவ்வகை இலக்கியம் கி.பி.300 முதல் 1500 வரையிலான இடைக் காலத்தில் பல்கிப் பரந்ததெனினும் சங்க காலத்திலேயே அரும்பிவிட்ட தெனலாம்.

மாங்காடு பாலசுப்பிரமணிய முதலியார், எம்.எ. எழுதியது ஆறுவது சினம் என்ற ஆத்திசூடித் தலைப்புடைய கட்டுரை. பழமொழி நானூறு கூறும் கருத்தை விளக்குமுகமாக இக்கட்டுரை அமைகின்றது. விரைவில் சினம் தணிய வேண்டும் எனக் கூற வந்த அவ்வை ஆறுவது என்று சொல்லை முன்வைத்தார். கதம், வெகுளி, சீற்றம், சினம் என்பன ஒருபொருட் பான்மொழிகள் எனினும் அவ்வை தேர்ந்த சொல் சினமே. இவற்றுள் விரைவில் ஆறும் இயல்பு சினத்திற்கே உளது. இதற்குக் காட்டாக நாலடியார் பாடல் ஒன்றைச் சான்றாக்குகிறார். நீசர் வெகுளி பரக்கும், சான்றோர் சினம் தணியும்.

திருப்பதி அந்தாதி என்ற தலைப்பில் 10 செய்யுட்கள் தரப்பட்டுள்ளன. இது ஒரு சிற்றிலக்கிய அறிமுகமாகும். (சிலம்பு 42, பக்.389-391)

இளசை ஒருபாவொரு பஃது என்ற சிற்றிலக்கியமும் இதழில் அச்சேற்றப்பட்டுப்பாடல் அடியில், அடிக்குறிப்பாகப் பாரதியார் தொகுப்பில் இதுவரை வெளி வராதது என்று வந்துள்ளது.

அரிய நூல்களின் அறிமுகமும் அச்சேறாதவை அச்சேற்றப் படுதலும் செந்தமிழ்ச் செல்வியில் காணப்படுகின்றன.

விடுதலைக்கு முன்னர் தொடங்கப் பெற்ற இதழாதலின் படித்த சந்தாதாரிடையே ஆங்கில மோகம் இருந்தது. அதனால் தமிழ் இலக்கியப் பாடல்கள் மொழியாக்கம் செய்யப்பட்டன. டி.பி. கிருஷ்ண சாமி முதலியார் ஆத்திசூடிப் பாடல்களை ஆங்கிலத்தில் எழுதினார். அவரது ஆங்கில மொழி பெயர்ப்பிற்கு முன் தமிழ்ப்பாவடிவம் உள்ளது. மொழி பெயர்ப்பு எவ்வாறுளது என்றறியும்படி இவ்வமைப்புக் காணப் படுகிறது. (சிலம்பு 5, ப.265) உலகநீதி போன்ற நீதிநூல்களில் காணப் படும் சில செய்யுட்களை மட்டுமே இவர் மொழியாக்கம் செய்தார். தமிழ் இலக்கியப் பெருமையை ஆங்கிலர் அறியவும் இது துணையாக இருந்தது. தமிழின் பெருமையை ஆங்கிலம் தெரிந்த அயலவர் அறியச் செந்தமிழ்ச் செல்வி இப்பகுதியைப் பிரசுரித்தது. இது தொடர் கட்டுடரை போன்று பாடலும் மொழி பெயர்ப்புமாக அமைந்துள்ளது.

சங்க நூல்களின் உள்ளடக்கம் அகம், புறம் என இரு வகையுள் அடங்கும். மறத்தைப் பாடுபொருளாக் கொண்ட பரணியின் சிற்றிலக்கியக் கூறு மதுரைக் காஞ்சியில் உண்டு.

"அஞ்சுவந்த போர்க்களத்தான்
ஆண்டலை அணங்கடுப்பின்
வயவேந்தர் ஒண்குருதி
சினத்தீயின் பெயர்ப்பு பொங்க
தெறலருங் கடுந்துப்பின்
தொடித்தோட்கை துடுப்பாக
ஆடுற்ற ஊன்சோறு" (மதுரைக்காஞ்சி 29-35)

திணை, துறைகள் பல சிற்றிலக்கியங்களுக்கு வழி வகுத்துள்ளன. கைக்கிளை என்ற திணை கைக்கிளை மாலை எனும் சிற்றிலக்கியமாக மாறியது. ஆற்றுப்படை எனுந் துறை சிற்றிலக்கியமாகத் திகழ்கிறது. மகண் மறுத்தல் எனுந் துறையின் அடிப்படையில் எழுந்ததே மறம் எனுஞ் சிற்றிலக்கியமாகும். நாணிக்கண் புதைத்தல் எனுந்துறையில் வளர்ச்சியே ஒரு துறைக்கோவையாகும். சங்க இலக்கியத்துறை களிலிருந்து பிறந்த சிற்றிலக்கியங்கள் பலவாக இருக்க, அவற்றை ஓர் எண் கட்டுப்பாட்டிற்குள் அடக்க இயலாது. வடமொழியாளர் 96 வகை பிரபந்தங்க்ள் என்று வரையறை செய்வர்.

தமிழ் பக்தியின் மொழியாதலின் பக்தி உணர்வு காரணமாக இறைவன் மீது பதிகங்கள் பாடினர். பத்து என்ற எண்ணிக்கையில் ஒரு வகையான யாப்பில் அமைந்த சிற்றிலக்கியம் ஒரு பா. ஒரு பஃது மற்றொரு புலவன் இருபதாகப் பாடி இருபா இருபஃது என்றொரு

சிற்றிலக்கியத்தை உருவாக்கினான். இறைவன் மீது பாடிய மாலைகள் பல. இரண்டு, மூன்று, நான்கு என்று எண்ணிக்கை அடிப்படையில் மணிமணியான பாடல்களை அமைத்துப் புலவர்கள் இரட்டை மணிமாலை, மும்மணிமாலை, நான்மணிமாலை, நவமணிமாலை எனப் பல வடிவங்கள் உருவாக்கிப் பக்தி இலக்கியப் பரப்பை விரிவாக்கினர்.

ஒரு சிற்றிலக்கியம் தோன்றினால் அதிலிருந்து மற்றொன்றைத் தோற்றுவிப்பர். ஊர் வெண்பா தோன்றியதும் சிலேடை வெண்பாக்கள் பாடினர். குறத்திப் பாட்டு தோன்றியதும் குறவஞ்சி உருவாகியது. உழத்திப் பாட்டிலிருந்து பள்ளு இலக்கியம் முகிழ்த்தது. பிள்ளைக்கவி, பிள்ளைத்தமிழ் தோன்ற வழி வகுத்தது. சமுதாயச் செய்திகளைத் தாங்கி வரும் பல சிற்றிலக்கியங்கள் நிலைபேறாந் தன்மையுடையனவாய் விளங்குகின்றன.

சமயக் கருத்து அடிப்படையில் திருக்கோவையாகும். சமயத் தத்துவக் கருத்துக்கள் அடிப்படையில் பாசவதை, மோகவதைப் பரணிகள் தோன்றின. மகளிர் விளையாட்டினை முன்னிறுத்தி ஊசற்பாட்டு, அம்மானைப் பாட்டு போன்ற சிற்றிலக்கியங்கள் தோன்றின. சிற்றிலக்கியங்களிற் பல சொல்லணிக் கவிதைகளாகும். பொருளின் தன்மையும், ஒருவனது உடைமை, குணங்களையும் பாதுகாக்கும் வண்ணம் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் திகழ்கின்றன. செந்தமிழ்ச் செல்வியில் பழைய சிற்றிலக்கியங்களின் திறனாய்வுகளும் இடம் பெற்றுள்ளன. அரிய சிற்றிலக்கியங்களும் அச்சேறியுள்ளன.

பத்துப் பாடல்கள் அமைந்த பதிகம் எனுஞ் சிற்றிலக்கியத்தை அறிமுகப்படுத்தியவர் காரைக்கால் அம்மையார். தேவாரத் திருப்பதிகங் களுக்கு மூத்தது அம்மையாரின் மூத்த திருப்பதிகம்தான் சிற்றிலக்கியங்கள் தோன்ற வழி வகுத்தது. இவரது அற்புதத் திருவந்தாதியும் திருவிரட்டை மண்மாலையும் பிற்காலத்தில் சிற்றிலக்கியங்கள் வளர வழி காட்டின. கட்டளைக் கலித்துறை யாப்பினை அம்மையார்தான் அறிமுகப்படுத்தினார். இவர் செய்யுட்களில் வகையுளியின்றிப் பாடும் திறனுடையவர். வெண்பாவிற்குப் புகழேந்தி எனப் புகழ்ந்தாலும் அவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர் அம்மையார்தான். தமது இரு பிரபந்தங்களையும் அந்தாதித் தொடையில் அம்மையார் பாடியருளியுள்ளார். இறை உணர்வால் விளைந்தனவே இவரது சிற்றிலக்கியங்கள்.

"உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக்
கரைவினால் காரைக்கால் பேய்சொற் - பரவுவார்
ஆராத அன்பினோடு அண்ணலைச் சென்றேத்துவார்
பேராத காதல் பிறந்து" என்று அவரே தம் கருத்தை விளக்கி விடுகிறார். பக்தி இயக்கத்துக்கும் தமிழ் இலக்கிய உலகுக்கும் ஒரு வழிகாட்டியாக அம்மையார் விளங்கினார் என்ற முடிவைக் கூற வந்த வித்துவான் கா.சி.தனக்கோடி அம்மையார் திருமுறை மாட்சி என்ற கட்டுரைத் தலைப்பில் அம்மையாரின் சிற்றிலக்கியங்களைத் திறனாய்வு செய்து, படிப்போரைச் சிந்திக்க வைத்துள்ளார். (சிலம்பு 41, பக்கம் 302-308)

தமிழில் தோன்றிய சிற்றிலக்கியங்கள் அனைத்தும் நிலை பெறவில்லை. இலக்கியச் சுவை மலிந்தவை அழியவில்லை. மறைந்து பட்ட சிலவும் எழுந்த காலத்தில் சமுதாயத்திற்குத் துணை புரிந்திருக்க வேண்டும் சிற்றிலக்கிய வடிவங்கள் பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்யின் அது சிறந்த இலக்கியப் பணி என்று மயிலை பு.செல்வராசன் தம் சிற்றிலக்கியங்களின் தோற்றம் எனுங் கட்டுரையில் கூறியுள்ளார். (சிலம்பு 40 பக்கம் 315-320) திருவாளர் எம்.எஸ் பூரணலிங்கம் பிள்ளையவர்கள் செந்தமிழ்ச் செல்வியில் எழுதிய தொடர் கட்டுரைகள் பல. அவற்றுள் ஒன்று 'பொருநை நாட்டுப் புலவர்கள்' (சிலம்பு 7 பரல் 4,5) நெல்லைத் தமிழ்ப்புலவர்களை அவர் அறிமுகப்படுத்தும்போது அவர்கள் செய்த சிற்றிலக்கியப் பணிகளையும் விளக்கியுள்ளார்.

இலக்கியப் புகழ் வாய்ந்த ஆறு பொருநையாகும், தண்பொருநை என்று புறநானூறும், பொருனைப் பொறையன் என்று சிலப்பதிகாரமும் இவ்வாற்றினை அறிமுகப்படுத்துகின்றன. திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றாலக் குறவஞ்சி முதலாய 14 சிற்றிலக்கியங்களைத் தமிழ் இலக்கிய உலகிற்குத் தந்தார். சேரமேசர் முதுமொழி வெண்பா தந்த சிவஞானமுனிவர், சிவசயிலப்பள்ளு தந்த ஆழ்வார்குறிச்சி இராமநாதன் கவிராயர், முக்கூடற்பள்ளு தந்த இனாயநயினார், மச்ச புராணத்தைத் தமிழ்ப்படுத்தியவரும் வடமலை வெண்பா எழுதியவருமான வடமலையப்ப பிள்ளையன், திருநெல்வேலி தலபுராணம் பாடிய நெல்லையப்பன் கவிராயர், காதல்பிரபந்தம் தந்த தச்சனல்லூர் அழகிய சொக்கநாத பிள்ளை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் முதலிய பிரபந்தங்கள் தந்த குமரகுருபர சுவாமிகள், அகலிகை வெண்பா, கோம்பி விருத்தம், நெல்லைச் சிலேடை வெண்பா ஆகிய சிற்றிலக்கியங்கள் தந்த வெள்ளகால் ப.சுப்பிரமணிய முதலியார் போன்ற பலர் தமிழ்ச் சிற்றிலக்கிய பணி செய்திருப்பதைத் திரு.எம்.எஸ். பூரண லிங்கம் பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

ஆழ்வை கோனேரியப்பக் கவிராயர், நம்மாழ்வார், மாறோகத்து நப்பசலையாயர், கடிகை முத்துப் புலவர், கடிமை நமசிவாயப் புலவர், வசை கவி ஒட்டப்பிடாரம் ஆண்டான் கவிராயர், சந்தவிருத்தப் பாவில் சிறந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆகியோர் குறித்துத் தமிழ்க் கா.சு. திரு.கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதிய கட்டுரை பின்னர் தனி நூலாக விரிந்தது. சிற்றிலக்கியச் செல்வர்கள் செய்த பணிகளை இக்கட்டுரை வெளிப்படுத்திய பின்னர்தான் தமிழ் அறிஞர்கள் இத்துணைபேர் இம்மாவட்டதில் பிறந்த தமிழ்ப் பணி செய்துள்ளனர் என அறியமுடிகிறது. பத்திரிகைச் செல்வாக்கினால்தான் இவர்கள் செய்த தமிழ்ப் பணியைத் தமிழ் கூறுநல்லுலகம் அறியமுடிந்தது.

பதிக இலக்கியங்களில் தொன்மையானது பதிற்றுப்பத்து என்றும் நூலின் கருத்தைப் பதிய வைப்பதே பதிகம் என்றும் அறிஞர் க.ப. அறவாணன் கூறுகிறார். (சிலம்பு 48, பக்கம் 591) பதிற்றுப் பத்துப் பதிகங்களைத் தொடர்ந்து சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, நீலகேசி ஆகிய காப்பியங்களிலும் பதிகங்கள் இடம் பெற்றிருப்பதை இவர் சுட்டிக் காட்டுகிறார். நூலின் பொதிபொருளை இப்பதிகங்கள் பதிய வைத்திருக்கின்றன என்ற அளவில் பதிற்றுப்பத்துப் பதிகங்களுக்கும் இவற்றிற்கும் ஒற்றுமை பிற கூறுகளில் முற்றும் வேறுபட்டவை (சிலம்பு 593) என்று கருத்துக் கூறி வேறுபாடுகளை விளக்கியுள்ளார். பதிகம் தனிப்பிரபந்தமாக வளர்ந்த போது ஒரு பொருளைக் குறித்துப் பத்துச் செய்யுட்களால் பாடப் பெற்றது. "நூலின் கருத்துப் பொதி நிலை என்ற முடிப்புரை நிலை மாறி, சிலம்பின் காலத்தில் முகவுரையாக மாறிய, பதிகம் என்ற சொல் கி.பி.ஆறாம் நூற்றாண்டளவில், பத்துப் பாடல்களையுடைய ஒரு பிரபந்தம் என்ற பொருளிலும் வழங்கத் தொடங்கிவிட்டது" என்று அறிஞர் க.ப. அறவாணன் பதிக வளர் நிலையை வரலாற்று அணுகுமுறையில் விளக்கியுள்ளார். பதிகம் என்ற பெயர் ஒற்றுமை மட்டும் பழங்காலப் பதிகத்திற்கும் பிரபந்த பதிகத்திற்குமிடையே காணப்படுகிறது. காரைக்கால் அம்மையாரின் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் பதிகப் பிரபந்தத்தின் தொடக்க கால எடுத்துக் காட்டுகளாகும். கி.பி. 7, 8, 9ஆம் நூற்றாண்டுகளில் 85க்கு மேலாகப் பதிக நூல்கள் தோன்றின.

பதிகம், பாயிரம் ஆகியவற்றின் வேறுபாடுகளை அறிஞர் க.ப.அறவாணன் விளக்குகிறார். பதிக வளர்ச்சியில் மூன்று கால கட்ட வளர்ச்சியை இலக்கியப் பதிகம் வளர்ச்சி வரலாறு என்ற கட்டுரை விளக்குகிறது.

தமிழ்ப் புலமையின் சங்க மாளிகை சிவகங்கை வீர மறவரின் வித்தகக் கோட்டை என்று யோகி சுத்தானந்த பாரதியார் (53:72) தமது 'தெய்வசிகாமணிப் புலவர்' என்ற கட்டுரையில் குறித்தார். சிற்றிலக்கியங் களைத் தந்த முகவை மாவட்டக் கவிஞரின் கவித்திறனை விளக்கினார். சாற்றுக்கவியால் சிறப்புப் பெற்றவர் தன்னை அறிமுகப்படுத்திய ஆசிரியர் தெய்வசிகாமணிப் புலவர் என்று சுத்தானந்தர் கூறுகிறார்.

அண்ணாமலைக் கவிராயர் தனிப் பாடலுரை எனுங் கட்டுரையில் டாக்டர் ந. சேதுரகுநாதன் சிற்றிலக்கியம் தந்த புலவரைப் போற்றுகிறார். (53:85-89)

வள்ளலார் வகுத்த சுத்தசன்மார்க்கம் என்ற தலைப்பில் டாக்டர் சொ. சிங்காரவேலன் எழுதிய கட்டுரையும் சிற்றிலக்கியப் பணிக்குத் துணை செய்வதாகும். (53:171-176)

திருக்குறள் பணியே கழகத்தின் தனிப்பெரும் பணி என்ற கட்டுரை (53:483-489)யில் குறள் குறித்த சிற்றிலக்கியங்கள் விளக்கம் பெறுகின்றன. திருக்குறள் தாலாட்டு தாய்மார் வளர்த்த தீந்தமிழ்த் தாலாட்டு மெட்டில் அமைக்கப் பெற்றது. அறத்துப் பால் பொருட்பால் மட்டும் இத்தாலாட்டில் இடம் பெறுகின்றன. திருக்குறள் காவடிச் சிந்து என்ற சிற்றிலக்கியம் அறம் பொருள் பற்றிய 108 அதிகாரங்கட்கும் 108 பாடல்களாக அமைந்த ஒன்றாகும்.

சிற்றிலக்கியம் 96 வகையன்று 287 வகை என்று கழகப் புலவர் இரா.இளங்குமரன் (சிலம்பு 50 பக்கம் 283) பட்டியல் ஒன்றை அகர வரிசைப்படுத்தியுள்ளார். ஆய்வுக்கு இது துணை செய்யும். சிற்றிலக்கியங்கள் பெரும்பாலும் திருக்கோயில்கள், இறைவன் திருவிளை யாடல்கள், பெருநில, குறுநில மன்னர்கள், புலவர்கள், தொழில்கள், விளையாட்டு, போர், வாழ்வின் பல்வேறு சிறப்பு நிகழ்ச்சிகள் அடிப்படையில் தோன்றியுள்ளன. மக்கள் வரலாறு, பழக்க வழக்கங்கள் இலக்கியங்கள் பற்றிய செய்திகளை அவிக்க இவை உதவுகின்றன. (சிலம்பு 52: பா.136-138) இது ஒரு தொடர் கட்டுரை. இது ஒருவகைச் சிற்றிலக்கியமே.

மாரி வாயிலின் மாட்சி என்ற தலைப்பில் கட்டுரை எழுதிய அறிஞர் திருமதி நா.உசாதேவி அவர்கள் மாரிவாயில் ஒரு சிற்றிலக்கியம் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார். (சிலம்பு 52: ப.143)

அரிய சிற்றிலக்கிய நூல்கள் செல்வியில் அச்சேறியுள்ளன.

செல்வியில் வெளிவந்துள்ள பாராட்டு விழாச் செய்யுட்கள், கையறு நிலைப்பாடல்கள் போன்றவற்றைத் தொகுத்தால் ஒவ்வொரு தொகுதியும் சிற்றிலக்கியத் தொகுதியாகத் திகழும்.

சிற்றிலக்கிய ஆய்வாளர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக இவ்விதழ் விளங்குகிறது.

## இக்கால இலக்கியப்பணி

சங்க இலக்கியங்கள் மட்டுமின்றி இக்கால இலக்கியமான புனை கதை குறித்தும் ஆய்வுக் கட்டுரைகள் ஆரம்ப காலங்களில் செந்தமிழ்ச் செல்வியில் இடம் பெற்றுள்ளன. புனை கதை சிறுகதை, நாவல் என இரு வகையுள் அடங்கும். இவற்றுள் சிறுகதையின் இலக்கணம் இவ்விதழில் 1931-32ஆம் ஆண்டிலேயே விளக்கப்பட்டுள்ளது. ஆங்கில நூல்களைப் படித்து அதில் காணப்பெறும் புத்திலக்கிய வகை போன்று தமிழிலும் எழ வேண்டும் என்ற ஆர்வத்தின் காரணமாக வரையறைகளும் பிற நாட்டுச் சிறுகதைகளின் மொழி பெயர்ப்புக்களும் வெளி வந்துள்ளன.

மாங்காடு பாலசுப்பிரமணிய முதலியார் எம்.ஏ. எழுதிய சிறுகதை என்ற கட்டுரையில் (சிலம்பு 19, பரல்1) சிறுகதை பற்றிய வரையறையை விளக்கியுள்ளார். கட்டுரை போலவே சிறுகதை என்பதும் தமிழில் அண்மையில் ஏற்பட்ட இலக்கிய வகையாம். திங்கட்டாள், வாரத்தாள் முதலிய போதுத்தாட்கள் (Periodicals) இந்நாள் மிகுந்து பரவும் நிலைமையே சிறுகதை விரைவில் ஓர் இலக்கிய வகையாக மேற் கொள்ளப் படுவதற்கு இசைவாயிற்று எனக் கட்டுரையைத் தொடங்குகிறார்.

சிறுகதைக்கும் நாவலுக்கும் உள்ள வேறுபாட்டினைக் கூறும் போது நாவலைப் புனை கதை என்றே அழைக்கிறார். இதழின் பிறபகுதிகளில் நாவல் நெடுங்கதை என்று வழங்கப்படுகிறது. நோக்கத் தாலும், அமைப்பாலும், ஆக்கத்தாலும் சிறுகதை புனை கதையின் வேறாம் (சிலம்பு 19 ப.24) சிறுகதையின் நுதல் பொருள் சிறிய வரம்புக்குள், அழுத்தமும் அகலமும் பொருந்துமாறு விரிக்கத்தக்கதாக இருத்தல் வேண்டும்என்று விளக்கும் இவர், இவ்வரைவு இலக்கணத்திற்கு மூல நூல் எது என்பதனைக் குறிக்கவில்லை.

ஒரு கதை முளை வேறுபட்ட பலவற்றுள் யாதானும் ஒன்றாக இருத்தல் கூடும். ஒரு செய்தி, ஒரு பண்பின் பகுதி, மக்கள் வாழ்க்கை நுகர்ச்சிகளில் ஒன்று கொண்டும் சிறு கதை ஆக்கப்படலாம் (சிலம்பு

19, ப.25) என்ற இவரது வரையறை தமிழில் எழுந்த வரையறையாகக் கொள்ளலாம்.

ஏற்புடைய எச்சிறுகதையிலும் நடுநாடியாக ஒரு யாப்பியைவு இருத்தல் வேண்டும். அவ்வியைபின் உறுப்புக்களாவன நான்கு. அவை இயக்க கருத்தின் ஒருமை **(Unity of Motive)** நோக்கத்தின் ஒருமை **(Unity of Purpose)** வினையொருமை **(Unity of Action)** மனப் பாட்டொருமை **(Unity of Impression)** என்பன என்று கட்டுரையாசிரியர் விளக்கும் போதுதான் தம்மை வெளிப்படுத்திக் கொள்கிறார். இறுதியில் தம் சொந்தக் கருத்தாகச் சிறுகதைக்கு விளக்கம் தருகிறார். எளிதாகக் கூறுமிடத்து ஏற்புடைய ஒரு சிறுகதை ஒரேவொரு கருத்ரைத் தெரிவிக்கத் தொடங்கி, அதை ஒரே நோக்கத்துடன் நேர்முறையில் கூறி முடிவதாக இருக்க வேண்டும். யாதானுமொரு சிறுகதையை யாத்தற்கு முன்னர் ஒரு சிறந்த மன விளைவைப் படிப்பவர் உள்ளத்தே பதிவிக்க வேண்டும் என்னும் திண்ணிய எண்ணம் இலக்கிய வினையனுடைய உள்ளத்தில் வேரூன்ற வேண்டும்

நாவல் இலக்கியம் தமிழில் பிரதாப முதலியார் சரித்திரம் என்ற வசன காவியத்துடன் தொடங்குகிறது. இரண்டாவது நாவல் தொடர் கதையாக வந்து நூலாக்கப்பட்டது. இன்றும் பல நாவல்கள் இத்தகைய நிலையில்தான் நூல் வடிவம் பெறுகின்றன. செந்தமிழ்ச் செல்வியில் நாவல் பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை என்ற குறையை நீக்கும் வகையில் மாயாவதி என்ற தொடர்கதை சிலம்பு 8இல் வெளி வந்துள்ளது. எம்.பி.எஸ்வேலாயுதம் என்பவர் இத்தொடர் கதையை எழுதியுள்ளார். நாவல் இவ்விதழில் நெடுங்கதை என்றே பெயர் பெறுகின்றது. மாயாவதி நாவலில் கதை நிகழ்ச்சியுடன் ஓர் உணவு விடுதியின் வருணனை சிற்றுண்டிச் சாலை, சொக்கநாதன் குளிர்பானம் சாப்பிட்டுக் கொண்டு தன்னைச் சுற்றிப் பார்த்தான். இரு பெண்களும் மிகவும் நாகரிகமாய் உடையுடுத்தி, தங்க நகைகளையணிந்திருந்தார்கள். கால்களில் பட்டு வைத்துத் தைத்த மிதியடிகளும் காணப்பட்டன. இரு பெண்களும் அழகே உருக்கொண்டு வந்தது போல் காணப்பட்டனர். அதிகமாய் விவரிக்க வேண்டியதில்லை. சொக்கநாதன் கண்கள் அவர்களை நோக்கின. (சிலம்பு 8 ப.126) சொற்செட்டுடன் செந்தமிழ் நடையே பின்பற்றப்பட்டுள்ளது.

கொடுக்கூர் கோவிந்தன் அல்லது சம்புலிங்கம் காவி பூண்டது என்ற இரட்டைத் தலைப்புடைய தொடர்கதை செந்தமிழ்ச் செல்வி ஏழாஞ் சிலம்பில் உள்ளது. சிவ.கண்ணுச்சாமி இத்தொடர்கதையை எழுதியுள்ளார்.

நாடக வகைப் புனைவு இலக்கியத் தொடர் புகழேந்தி என்ற செந்தமிழ் நாடகமாகும். இதுவும் ஏழாஞ் சிலம்பில் இடம் பெற்றுள்ளது.

திருஞான சம்பந்தர் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட செந்தமிழ் நாடகம் ஒன்றும் செந்தமிழ்ச் செல்வியில் தொடராக வெளிவந்துள்ளது. இவ்விரண்டு நாடகங்களும் அங்கம் களம் காட்சி என்ற அமைப்பில் உள்ளன. நடித்தற்குரிய நாடகங்களே. இக் கட்டுரைகைளைத் தொகுத்துத் தனித்தனி நாடக நூல்களாக்கலாம்.

பிற நாட்டுச் சிறுகதைகளும் மொழியாக்கம் செய்யப் பெற்றுச் செந்தமிழ்ச் செல்வியில் வெளியிடப்பட்டுள்ளன. ஆரம்ப கால இதழ்களில் இக்கால இலக்கியங்களாக நாவல், சிறுகதை, நாடகம் ஆகியவற்றிற்குச் சிறப்புத் தரப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. இப்போது வெளி வரும் இதழ்களில் டாக்டர் மு.வ. நாவல்களில் காணும் அறக் கருத்துக்கள் குறித்த ஆய்வு நிகழ்த்தப் பெறும் கட்டுரைகள் வெளி வந்துள்ளன. தமிழ் நாட்டில் ஏனைய பத்திரிகைகளில் தொடர்கதை சிறுகதை அதிகம் இடம் பெறலால் தமிழ் மொழிக்கென எழுந்த பத்திரிகையான செந்தமிழ்ச் செல்வியில் புனை கதை அம்சம் தொடரப் படவில்லை.

திருவனந்தபுரத்தைச் சேர்ந்த திரு தி.முத்துக்குமாரசாமி பிள்ளை திருநெல்வேலி இந்து கலாசாலையில் தலைமையாசிரியராகப் பணிபுரிந்தார். பேராசிரியர் பெ.சுந்தரம் பிள்ளைவர்கள் திருநெல்வேலி இந்துக் கல்லூரியின் முதன் முதல்வராகப் பணிபுரிந்தார். இவ்விரு செய்திகளும் சிலம்பு 14 பக்கம் 45இல் வரலாற்றுப் பகுதி என்ற கட்டுரையில் இடம் பெற்றுள்ளன. 1882ம் ஆண்டுத் தொடக்கத்தில் பிள்ளை அவர்கள் திருநெல்வேலி இந்து கல்லூரி (Hindu College) யில் திருவாளர் பி.சுந்தரம் பிள்ளை, எம்.ஏ. அவர்களுக்குப் பதிலாக சிலகாலம் (Principal) தலைமையாசிரியராக இருந்தார்கள். அவ்வருடத்தில் திருவனந்தபுரம் ஆங்கிலக் கல்லூரியில் (Professor of Philosophy and Logic) வேலை பார்த்து வந்த திரு.பி.சுந்தரம் பிள்ளை அவர்கள் உசூர் பிறவகை சிரசுதாரராகச் சென்ற போது, அவ்வேலைக்குப் பிள்ளை அவர்கள் கொல்லம் ஆண்டு 8.12.82ல் ஏற்படுத்தப் பெற்றார்கள் இம்மொழி நடையிலிருந்து ஒரு தலைமையாசிரியர் ஒரு முதல்வர் குறித்த செய்திகள் பெறப்படுவதுடன் நாடக ஆசிரியர் செய்த பிற பணியும் அறிய முடிகிறது.

மனோன்மணிய நாடக ஆசிரியர் நடராசன் என்ற பாத்திரப் படைப்பின் மூலம் தமது பயிரியல் அறிவை வெளிப்படுத்துகிறார். பயிரியல் அறிவுண்மையை எடுத்துக் காட்டும் வகையில் செந்தமிழ்ச்

செல்வியில் பேராசிரியர் பெ.சுந்தரம் பிள்ளை தொடர் கட்டுரை எழுதியுள்ளார். "புஷ்பங்களும் அவற்றின் தொழிலும்" என்ற தலைப்பில் பேராசிரியர் சுந்தரனார் விவேகசிந்தாமணியில் கட்டுரை எழுதியிருந்தார். அதனைச் செந்தமிழ்ச் செல்வி தொடர் கட்டுரையாக மீண்டும் வெளியிட்டது. "ஜீவராசிகளுடைய பொதுவான இருபெருங் குணங்களில் முதலாவதாக ஆஹார சுவிகாரவிருத்தி மரவர்க்கத்தில் நடந்தேறும் இயல்பை முன சஞ்சிகையில் ஒருவாறு கூறி முடித்தோம் அல்லவா, இப்போது அம்மரவர்க்கங்கள், தங்கள் தங்கள் ஜாதிக்கேற்றபடி தங்களுக்குப் பிரதிந்தியாகப் பிற்கிணையுண்டு பண்ணிவிடும் ஜீவராசிகள் இரண்டாம் இலக்கணமாகிய பிரத்தியுத் பாதனம் என்னும் தொழிலை எவ்விதம் நிறைவேற்றுகின்றன என்று சற்றே ஆராய்வோமாக". (சிலம்பு 8, ப.14) திரு. சுந்தரம் பிள்ளையவர் களின் உரை நடைப் போக்கினை அறியவும் தத்துவம் படித்திருப்பினும் பயிரின் ஆய்வும் உடையவர் என்பதை அறியவும் இப்பகுதி பயன்படுகிறது. பிற பத்திரிகைகளில் இடம் பெறும் நல்லறிஞர் கட்டுரைகளை எடுத்தாளும் போக்குச் செந்தமிழ்ச் செல்வி இதழில் காணப்படுகிறது என்பதற்கும் இப்பகுதி சான்றாகத் திகழ்கிறது.

இன்று வளர்ந்து வரும் இலக்கியத்துறை திறனாய்வுத் துறையாகும். இன்றைய இதழாசிரியர் திரு.இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் இவ்வகைக் கட்டுரைகளுக்கு இடம் தந்துள்ளார். இலக்கியத் திறனாய்வுக் கலையின் தோற்றம் (உலக இலக்கியங்களின் நோக்கில்) என்ற கட்டுரையை எழுதியிருப்பவர் ஆங்கில விரிவுரையாளர் திரு.டி.எஸ். திருமலை வேலு அவர்கள் ஆவார். (சிலம்பு 65 பக்.145-180) திறனாய்வுக் கலையின் கருப்பொருளைத் தந்த நூல் அரிஸ்ட்டாட்டலின் கவிதையியல் **(Poetics)** என்பதாகும். இக்கலையை உலகிற்கு அளித்த பெருமை கிரேக்க இலக்கியத்திற்கு உண்டு என்பதைக் கட்டுரையாசிரியர் விளக்கியுள்ளார். இக்கட்டுரை இலக்கியக் கொள்கை பற்றிய ஆய்விற்குத் துணையாகும்.

இலக்கியக் காலப்பகுதிகள், இயக்கங்கள், வகைமைகள் என இலக்கியங்களை மூவகை நெறிகளில் பகுத்தாயலாம். இவற்றுள் இலக்கிய வகைமை ஒப்பீட்டுத் திறனாய்வுத் துறைக் கோட்பாடாகும். இலக்கியத்தின் உருவத்தையும் உள்ளடக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு வகைமைப்படுத்துவது இலக்கிய வகைமைக் கொள்கையாகும். புற அமைப்பு அக அமைப்பு ஆகிய இரண்டில் ஒன்றன் அடிப்படையிலும் வகைமையைப் பகுக்கலாம் என்று மேனாட்டு இலக்கியக் கொள்கையாளர்களும் கருத்துகளை எடுத்துக் காட்டிப் பக்தியிலக்கிய வகைமை - சில வரையறைகள் என்ற தலைப்பில் முனைவர் சிவ. மங்கையர்க்கரசி எழுதிய கட்டுரை திறனாய்வுத் துறைக்

கட்டுரையாகும். (சிலம்பு 66, பக் 344-350) இதுவும் ஒரு தொடர் கட்டுரையே. அடிக்குறிப்பு மேற்கோள் அமைப்புடன் வெளிவந்துள்ள இக்கட்டுரை எம்.பில். பிஎச்.டி. ஆய்வாளர்க்குப் பயன்படும் வகையில் உள்ளது.

சொல்லாய்வுக் கட்டுரையிலிருந்து கொள்கையும் அதன் பொருத்தமும் என்ற அடிப்படையில் ஆய்வுக் கட்டுரைகள் செந்தமிழ்ச் செல்வியில் இன்று வெளிவந்து கொண்டிருக்கின்றன. இலக்கிய ஆய்வு வளர்ச்சிப் போக்கில் ஏற்பட்ட மாற்றத்தினைச் செல்வியில் காண முடிகிறது. பழைய மரபுகளைப் போற்றும் இன்றைய ஆசிரியர் புதிய வரவுகளையும் ஏற்கிறார். இது வரவேற்கத்தக்க அம்சமாகும்.

நெல்லையில் தோன்றி சென்னையில் வேர் விட்டு இன்று வேறு சில ஊர்களிலும் விழுதுவிட்டுக் காலூன்றி நிற்கும் ஆலமரம் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களையும் சைவ சமய நூல்களையும் வெளியிடுவதையே நோக்கமாகக் கொண்ட கழகம் பதிப்புத் துறையில் இடைவிடாது 70 ஆண்டுகட்கு மேல் செயல்புரிந்து வருகிறது. இந்தியா முழுதும் எந்தப் பதிப்பாளரும் பெறாத பத்மஸ்ரீ பட்டத்தைத் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் பெற்றார்கள். பதிப்புத் துறையில் சிறப்புப் பெற்றது கழகப் பதிப்பு ஆகும்.

தமிழ் உணர்வு மங்கிக் கொண்டு வரும் தமிழ்நாட்டில் செந்தமிழ்ச் செல்வியின் மூலம் தமிழனிடத்தில் தமிழ், தமிழ் உணர்வு, பற்று ஏற்பட வேண்டும். தமிழன் இழந்த புகழை மீண்டும் அடைய வேண்டும். தமிழ்நாட்டில் தமிழ்தான் ஆட்சி மொழியாக, பயிற்று மொழியாக வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தில் செந்தமிழ்ச் செல்வி இதழை வெளியிட்டு வருவதைக் காண மகிழ்ச்சியடைகின்றேன் என்று ப.வே. அரிகிருஷ்ணன் என்ற இளங்கவி கோலாலம்பூரிலிருந்து கடிதம் எழுதியுள்ளார். (சிலம்பு 65 பக்கம் 278) 1991இல் வெளிவந்த இதழில் வாசகன் எழுதிய இக்கடிதம் இதழ்நோக்கம் ஆரம்ப முதல் இன்று வரை நிறைவேற்றப்பட்டு வருவதைக் குறிக்கும்.

இலக்கியத் திறனாய்வுத் துறை ஆங்கிலக் கல்விப் பரப்பால் இன்று தனித்துறையாக வளர்ந்து வருவதை நன்குணர்ந்த செல்வியின் இன்றைய ஆசிரியர் திரு.இரா. முத்துக்குமாரசாமி திறனாய்வு நோக்கில் எழுதப் பெறும் கட்டுரைகளுக்குச் சிறப்பிடம் தருகிறார். சங்க இலக்கியங்களின் நோக்கில் இலக்கியத் திறனாய்வுக் கலையில் தோற்றம் பற்றி ஆங்கில விரிவுரையாளர் திரு.டி.எஸ்.திருமலை வேலு எழுதிய கட்டுரையை இதற்குச் சான்றாக்கலாம். (சிலம்பு 65 பக்.145)

சங்க இலக்கியங்களில் விலங்கினம், செடி கொடிகள் என்ற மாமனார் காலத்தில் எழுதி வந்த கட்டுரையாளர் மருமகனார் காலத்திலும் சங்க நூல்களில் கூவை, தில்லை, பிரம்பு, பூனை, வேங்கை, வேம்பு கண்டி எனப் பல்வேறு தலைப்புகளில் சங்க நூலாய்வு நிகழ்த்தி வருகிறார் திரு. பி.எல். சாமி (சிலம்பு 65) திறன் மிக்காரைப் பாதுகாத்துச் செல்லும் பண்பைக் காட்டும் வகையில் இப்போதைய ஆசிரியர் செயல்படுகிறார்.

நாடகத் தமிழ் இலக்கியம் குறித்த மனோன்மணீயம் கட்டுரையில் கற்பனைத் திறனை ஆராய்கிறார். டாக்டர் அ.நா. பெருமாள். கலைப் படைப்பிற்குக் கற்பனை தேவை. தேவையான கற்பனை சுந்தரனார் நாடகத்தில் உள்ளதால் இது ஒரு கலைப் படைப்பு என்கிறார் கட்டுரை யாசிரியர். கற்பனை, உண்மை, வேதாந்தம் அல்லது தத்துவம் ஆகியவற்றிடையே பாரதி வேறுபாடு காட்டுவதை அவர் தம் குயில் பாட்டு வழி உணர்த்தி மனோன்மணீத்தை விளக்குகிறார். கற்பனை என்ற சொல்லை இரு பொருளில் சுந்தரனார் கையாள்கிறார். மன ஆற்றலால் ஒன்றைக் கற்பித்துக் கூறும் திறன் என்ற பொருளில் ஓரிடத்தில் அமைத்துள்ளார். கற்பனை உலகம் கவிஞரின் எண்ண விரிவின் பரப்புக்குத் தக்கவாறு விரியும்.

இக்கால இலக்கியங்களான புதினங்கள், சிறுகதைகள் தொடக்க கால இதழ்களில் இடம்பெற்றன. இப்போது மு.வ.வின் புதினங்கள் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள் இடம் பெற்று வருகின்றன.

புதினம், சிறுகதைக்கு விளக்கங்கள் இலக்கண வரையறைகள் திறனாய்வு நூல்கள் தோன்று முன்னரே செல்வியல் வெளிவந்துள்ளன. முதுகலைப் பட்டம் பெற்றவர்கள் இவ்விலக்கணங்களை ஆங்கிலத்தில் படித்துத் தமிழ்ப் படுத்தியுள்ளமையை அறிய முடிகிறது.

சங்க நூல்கள், காப்பியங்கள், திருக்குறள் சிற்றிலக்கியங்கள் பற்றிய கட்டுரைகள் இடம் பெற்ற அளவிற்கு இக்கால இலக்கியங்கள் பற்றிய கட்டுரைகள் வெளிவரவில்லை என்பது தெளிவு.

* * * *

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தொல்காப்பியப் பொருளதிகாரம் ஆங்கில மொழிபெயர்ப்பு | 40.00 |
| சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு | 110.00 |
| நாடகமேடை நினைவுகள் | 160.00 |
| தமிழின் பா வடிவங்கள் | 35.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவன | |
| சுவடி விளக்க அட்டவணை (சித்த மருத்துவம்) | 75.00 |
| சுவடி விளக்க அட்டவணை (இலக்கியம்) | 70.00 |
| சுவடி விளக்க அட்டவணை (மெய்யியல் - நா.புறவியல்) | 70.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி - I | 110.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| பொருள் புதிது | 35.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| சின்னணைஞ்சான் கதை | 75.00 |
| தொல்காப்பியம் இலக்கியக் கோட்பாடுகள் | 110.00 |
| இயற்கை மொழியாய்வு-தமிழ் | 75.00 |
| சூடாமணி நிகண்டு: ஒரு சொல் பல்பொருள் விளக்கம் | 65.00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40.00 |
| இராசேந்திரன் (நாடகம்) (ம.ப.) | 50.00 |
| தமிழ் வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 1 | 95.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 2 | 60.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 3 | 90.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை (அ.சொ.) | 35.00 |
| தமிழ்த் தூது (ம.ப.) | 20.00 |
| யாப்பருங்கலம் (ம.ப.) | 170.00 |
| முல்லை | 25.00 |
| பரணர் | 85.00 |
| திராவிட மொழியின் மூவிடப் பெயர் (ம.ப.) | 40.00 |
| பாஸ மகாகவியின் இரட்டை நாடகங்கள் | 36.00 |
| Persona in Tolkappiyam | 50.00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45.00 |
| Tamil India | 40.00 |

---

செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி 20.00